# ரமளான் 2013 - அனுதின ஆய்வுக் கட்டுரைகள்

ஆசிரியர்: உமர்



## பொருளடக்கம்

**இக்கட்டுரைகளின் பின்னணி:**

*இந்த வருடம் (2013), உமரின் தம்பி அப்துல்லாஹ், ரமளான் மாதத்தில் உமரோடு கடிதங்கள் மூலம் உரையாட முடிவு செய்துள்ளார். இஸ்லாமுக்கு எதிராக சுமத்தப்படும் குற்றச்சாட்டுகளுக்கு முக்கியமாக "இஸ்லாம் வாள் மூலம் பரப்பப்பட்டது" என்ற குற்றச்சாட்டுகளுக்கு தான் பதில் அளிப்பதாக அப்துல்லாஹ் கூறியுள்ளார். இந்த தலைப்பில், பல கடித உரையாடல்கள் உமருக்கும் அவரது தம்பி, அப்துல்லாஹ்விற்கும் நடைப்பெற்றது, அவைகளை தொடர் கட்டுரைகளாக கீழே தரப்பட்டுள்ளது.*

---

***நாள் 1 - அன்புள்ள அண்ணாவிற்கு . . . போர் புரிவது அமைதியை நிலைநாட்டுவதற்கு அல்லவா?***

*அன்புள்ள அண்ணா,*

*உங்களுக்கு என் வணக்கங்கள்.*

*எப்படி இருக்கிறீர்கள்? உங்கள் வேலை எப்படி இருக்கிறது?*

*நான் இந்தியாவில் இருக்கும் போது, உங்களோடு அனேக விஷயங்கள் பற்றி உரையாடினேன். இப்படி உரையாடும் போது, நீங்கள் அடிக்கடி வைத்த ஒரு குற்றச்சாட்டு என்னை அதிகமாக பாதித்தது. நீங்கள் வன்முறைகள் பற்றியும், இஸ்லாமிய போர்கள் பற்றியும் அதிகமாக பேசினீர்கள். முக்கியமாக, எங்கள் இறைத்தூதர் முஹம்மது (ஸல்) அவர்கள் மீது அனேக குற்றச்சாட்டுகளை வைத்தீர்கள்.*

*எனவே, இந்த ரமளான் மாதத்தில், உங்களோடு அனேக விஷயங்களை நான் பகிர்ந்துக்கொள்ளலாம் என்று விரும்புகிறேன். முக்கியமாக, எங்கள் இறைத்தூதர் புரிந்த போர்களில் உள்ள நீதியையும், நியாயத்தையும் உங்களுக்கு விளக்கப்போகிறேன். அதன் பிறகு நீங்கள் குற்றச்சாட்டுகளை முன்வைக்கமாட்டீர்கள். நீங்கள் எந்த கேள்வியை கேட்டாலும் சரி, என்னால் உங்களுக்கு பதில் அளிக்கமுடியும்.*

*பத்ருப் போர் முதற்கொண்டு, உஹூத் போர், கைபர் போர் என்று எந்த போரைப் பற்றிக் கேட்டாலும், என்னால் பதில் சொல்லமுடியும். ஆனால், ஒரு முக்கியமான விவரம் என்னவென்றால், நீங்கள் திறந்த மனதுடன் நான் சொல்லும் விவரங்களை ஆராயவேண்டும். இப்படி நீங்கள் செய்தால், நிச்சயமாக இஸ்லாம் பற்றிய சத்தியத்தை அறிந்துக்கொள்வீர்கள்.*

*இதோ, இன்று ரமளான் முதல் நாள், நான் நோன்பு இருக்கிறேன். இது என்னுடைய இரண்டாவது ரமளான் ஆகும். இந்த முறை, நான் இஸ்லாம் விஷயத்தில் உங்கள் மீது வெற்றி கொள்வேன் என்று முழுவதுவாக நம்புகிறேன். உங்கள் கேள்விகளை நீங்கள் கேட்கலாம்.*

*இப்படிக்கு,*

*உமரின் தம்பி*

---

***அன்புள்ள தம்பிக்கு, உன் அண்ணன் உமர் எழுதும் கடிதம்.***

*உன் கடிதம் கண்டு மகிழ்ச்சி அடைந்தேன்.*

*உன் உடல் நலம் எப்படி இருக்கிறது?*

*விசாவில் உள்ள குளறுபடியினால் சௌதியிலிருந்து 75 ஆயிரம் பேர் இந்தியா திரும்புவதாக கேள்விப்பட்டு நாங்கள் திடுக்கிட்டோம். அப்பா உன்னிடம் தொலைபேசியில் பேசிய பிறகு தான்*

*எங்களுக்கு நிம்மதியாக இருந்தது. உன்னுடைய விசாவில் எந்த ஒரு பிரச்சனையும் இல்லை என்று நீ சொன்ன பிறகு மிக்க மகிழ்ச்சி அடைந்தோம்.*

*இஸ்லாம் பற்றிய ஒரு முக்கியமான காலகட்டத்தில் நாம் வாழ்ந்து வருகிறோம். கடந்த காலத்தில் இஸ்லாம் பற்றி உலக மக்களுக்கு இருந்த அறிவைவிட, இன்று இஸ்லாமிய அறிவு அதிகமாக உள்ளது. இணையம் வந்ததினால், உலகம் சுருங்கிவிட்டது, அறிவும் பெருகிவிட்டது. அறிய புத்தகங்களை படிக்க வெளிநாடுகளுக்குச் செல்லத்தேவையில்லை, பெரிய நூலகங்களைத் தேடிக்கொண்டு பட்டணங்களுக்குச் செல்லத் தேவையில்லை, நம் கைபேசியிலேயே உலக நூலகங்கள் அடங்கிவிடுகின்றது. என்னே முன்னேற்றம்! இதையெல்லாம் நான் ஏன் இப்போது உன்னிடம் சொல்லிக்கொண்டு இருக்கிறேன் என்று நீ ஆச்சரியப்படலாம். காரணம் இல்லாமல், நான் இவைகளை உனக்கு எழுதவில்லை. முஸ்லிம் அறிஞர்கள் சொல்வது தான் உண்மை, அவர்கள் சொல்வதை இதர மக்கள் சரிபார்க்க முடியாது என்ற நம்பிக்கை ஒரு காலகட்டத்தில் இருந்தது. ஆனால், இன்றோ, அந்த எண்ணங்கள் மாறிவிட்டன. எனவே, நீ எவைகளை எழுதினாலும், அவைகளை சரி பார்க்க என்னால் முடியும் என்பதை கவனத்தில் வைத்துக்கொள்.*

*தமிழ் நாட்டு இஸ்லாமிய அறிஞர்களே, எழுத்து விவாதத்திற்கு வர பயப்படும் இந்த காலத்தில், நீ தைரியமாக முன்வந்து, நாம் இஸ்லாமிய போர்கள் பற்றி பேசுவோம் என்றுச் சொன்னது எனக்கு அதிக மகிழ்ச்சியைத் தருகின்றது. மேலும், நீ தெரிந்தெடுத்த தலைப்பு இருக்கின்றதே, இது மிகவும் ஆபத்தான தலைப்பு, எனக்கல்ல, உனக்கு! இந்த வருட ரமளான் மாதத்தில் உன் விருப்பத்தின்படியே நாம் இஸ்லாமிய போர்கள் பற்றி அலசுவோம்.*

***உன் ஆய்விற்கு உதவியாக இருக்கும்படியாக, சில விவரங்களை உனக்கு நான் இப்போதே தெரிவித்து விடுகிறேன்.***

*நீ உன் கடிதத்தில், பத்ருப் போர், கைபர் போர், உஹுத் போர் என்று குறிப்பிட்டு இருந்தாய். இந்த போர்கள் பற்றி நீ பதில் சொல்லத் தயார் என்றும் எழுதியிருந்தாய். ஆனால், முஹம்மதுவின் வன்முறைகள் (உன் கண்ணோட்டத்தில் போர்கள்), கீழ்கண்ட வகைகளைச் சார்ந்ததாக இருக்கிறது, எனவே, இவைகளைப் பற்றி நீ ஆராய்ந்து, விவரங்களை தயாராக வைத்துக்கொள் என்று உனக்கு அறிவுரை கூறுகிறேன்.*

*அ) தற்காப்புக்காக செய்த போர்கள் (Defense)*

*ஆ) வலியச் சென்று புரிந்த போர்கள் (Offence)*

*இ) தம்மை விமர்சித்தார்கள் என்ற காரணத்திற்காக தனிமனிதர்களை கொன்ற நிகழ்ச்சிகள்*

*ஈ) வியாபாரிகள் மீது திடீர் தாக்குதல் புரிந்து பொருட்களை கொள்ளையிட்டு, வியாபாரிகளைக் கொன்ற வழிப்பறி கொள்ளைகள் (Raids)*

*மதினாவில் வாழ்ந்த அந்த 10 ஆண்டுகளில் அவர் புரிந்த போர்கள், வழிப்பறி கொள்ளைகள், தனிமனிதர்களை கொல்லும் செயல்களின் எண்ணிக்கை எத்தனை என்று உனக்குத் தெரியுமா? தெரிந்துவைத்துக்கொள், உனக்கு அவைகள் பிரயோஜனமாக இருக்கும்.*

*உன்னை அடுத்த கடிதத்தில் நாளை சில கேள்விகளோடு சந்திக்கிறேன்.*

*இப்படிக்கு,*

*உன் அண்ணன்*

*உமர்*

***மூலம்***

***உமரின் ரமளான் மாத கட்டுரைகள்***

**நாள் 2 - முஹம்மதுவும் வழிப்பறி கொள்ளைகளும்**

*அன்புள்ள தம்பிக்கு உமர் எழுதும் கடிதம்.*

*நீ என்னுடைய முந்தைய கடிதத்தை படித்து இருந்திருப்பாய் என்று நம்புகிறேன். உன்னுடைய விருப்பத்தின் படியே, இஸ்லாமிம் பற்றிய சில விவரங்களை உன்முன் வைக்கிறேன். இதன் மூலம் நீ இஸ்லாம் பற்றி விவரமாக விளக்கலாம்.*

## மக்காவும் மதினாவும்:

*முஹம்மது மக்காவில் இருக்கும் வரைக்கும் ஒரு அமைதியான, சகிப்புத்தன்மையுள்ள வாழ்க்கையை வாழ்ந்தார், மற்றவர்களும் அந்தப்படியே வாழும் படி கேட்டுக்கொண்டார். அல்லாஹ்வின் வசனங்களும் பெரும்பான்மையாக சகிப்புத்தன்மையுள்ள வசனங்களாகவே வந்து இறங்கின. ஆனால், அவர் மதினாவிற்கு வந்த பிறகு, ஆட்களின் பலம் அவருக்கு அதிகரித்த போது, அமைதி மார்க்கமாக இருந்த இஸ்லாம், சிறிது சிறிதாக வன்முறையில் ஈடுபட ஆரம்பித்தது. முஹம்மது மதினாவில் வாழ்ந்த அந்த 10 ஆண்டுகளில் இஸ்லாமுடைய ஆரம்பத்தை அப்படியே தலைகீழாக மாற்றிவிட்டார்.*

*இந்த கடிதத்தில், இஸ்லாமின் முதல் மூன்று வழிப்பறி கொள்ளைகள் பற்றி உனக்கு சுருக்கமாக விவரிக்கிறேன். இவைகளை ஆங்கிலத்தில் "Raid" என்பார்கள்.*

*என்னது? வழிப்பறி கொள்ளையா? இப்படியெல்லாம் இஸ்லாமில் நடைப்பெறவில்லை என்று நீ நினைக்கிறாயா? தம்பி தொடர்ந்து படி.*

*மக்காவிலிருந்து மதினாவிற்கு ஹிஜ்ரி வந்த முதல் ஆண்டே முஹம்மது தம் கைவரிசயை காட்ட ஆரம்பித்துவிட்டார். மார்ச், ஏப்ரல் மற்று மே மாதங்களில் தொடர்ந்து வழிப்பறிக்காக ஆட்களை முஹம்மது அனுப்பினார். கீழ்கண்ட மூன்று வழிப்பறி கொள்ளைகள் மூலமாக, முஹம்மதுவிற்கு எந்த பொருளும் கிட்டவில்லை. மேலும் எந்த ஒரு உயிர்ச்சேதமும் நடைப்பெறவில்லை. சரி, வழிப்பறி கொள்ளைகள் பற்றி இப்போது படித்து அறிந்துக்கொள். அதன் பிறகு என் கேள்விகளை முன்வைக்கிறேன்.*

## முதல் வழிப்பறிக் கொள்ளை (First Raid): ஸய்ஃபுல் பஹ்ர்

*ஹிஜ்ரி 1, ரமழான் (கி.பி. 623 மார்ச்) மாதம் ஒரு படைப் பிரிவை நபி (ஸல்) அவர்கள் அனுப்பினார்கள். 30 முஹாஜிர்கள் இந்தப் பிரிவில் இடம்பெற்றனர். அவர்களுக்கு ஹம்ஜா(ரழி) அவர்களைத் தலைவராக ஆக்கினார்கள். ஷாமிலிருந்து மக்காவை நோக்கி வந்து கொண்டிருந்த குறைஷிகளின் வியாபாரக் குழுவை வழி மறிப்பதற்காக இவர்கள் சென்றார்கள். இந்த வியாபாரக் கூட்டத்தில் முந்நூறு நபர்களும் அவர்களுக்குத் தலைமையேற்று அபூஜஹ்லும் வந்து கொண்டிருந்தான். 'ஈஸ்' என்ற நகரத்தின் ஓரத்தில் உள்ள 'ஸய்ஃபுல் பஹ்ர்' எனும் இடத்தை இரு கூட்டத்தினரும் அடைந்த போது சண்டையிடுவதற்காக அணிவகுத்தனர். ஆனால், இரு கூட்டதினருக்கும் நண்பராக இருந்த மஜ்தி இப்னு அம்ர் அல்ஜுஹனி என்பவர் சமரசப் பேச்சுவார்த்தை நடத்தி போரைத் தவிர்க்கச் செய்தார்.*

*இப்போல் நபி (ஸல்) ஹம்ஜாவுக்கு வெள்ளை நிறக் கொடியைக் கொடுத்தார்கள். இதுதான் நபி (ஸல்) அவர்கள் நிறுவிய முதல் கொடியாகும். இக்கொடியை அபூ மர்ஸத் கன்னாஸ் இப்னு ஹுஸைன் அல்கனவி (ரழி) ஏந்தியிருந்தார்கள்.*

## இரண்டாம் வழிப்பறிக் கொள்ளை (Second Raid): 'ராபிக்'

*ஹிஜ்ரி 1, ஷவ்வால் (கி.பி. 623 ஏப்ரல்) மாதம் நபி (ஸல்) அவர்கள் 'ராபிக்' என்ற இடத்தை நோக்கி ஒரு படைப் பிரிவை அனுப்பினார்கள். இதற்குத் தலைவராக உபைதா இப்னுல் ஹாரிஸ் இப்னுல் முத்தலிப் (ரழி) இருந்தார். இப்படையில் 60 முஹாஜிர்கள் கலந்து கொண்டார்கள். இவர்கள் 'பத்தன் ராபிக்' என்ற இடத்தில் அபூஸுஃப்யானைச் சந்தித்தார்கள். இரு கூட்டத்தார்களும் ஒருவரை நோக்கி ஒருவர் அம்பெய்து கொண்டனர். மற்றபடி, உக்கிரமான சண்டை ஏதும் நடைபெறவில்லை.*

*காஃபிர்களின் படையிலிருந்த அல்மிக்தாத் இப்னு அம்ர் அல்பஹ்ரானி, உத்பான் இப்னு கஸ்வான் அல்மாஜினி ஆகிய இருவர் முஸ்லிம்களுடன் இணைந்து கொண்டனர். இவர்கள் முஸ்லிமாகத்தான் இருந்தனர். என்றாலும், ஹிஜ்ராவிற்காக மக்காவிலிருந்து வெளியேற முடியாத காரணத்தால், காஃபிர்களுடன் சேர்ந்திருந்தனர். எப்பொழுதாவது சந்தர்ப்பம் கிடைத்தால் தப்பித்து முஸ்லிம்களிடம் சேர்ந்துக் கொள்ளலாம் என்ற எண்ணத்தில் இந்த வியாபாரக் கூட்டத்துடன் வந்திருந்தனர்.*

*இந்தப் படையின் கொடி வெள்ளை நிறமாக இருந்தது. இதை மிஸ்தஹ் இப்னு உஸாஸா இப்னு அல் முத்தலிப் இப்னு அப்து மனாஃப் ஏந்தியிருந்தார்கள்.*

***மூன்றாம் வழிப்பறிக் கொள்ளை (Third Raid): 'கர்ரார்'***

*ஹிஜ்ரி 1, துல்கஅதா (கி.பி. 623 மே) மாதம் 'கர்ரார்' என்ற இடத்திற்கு ஸஅது இப்னு அபீ வக்காஸ் (ரழி) தலைமையில் படைப் பிரிவு ஒன்றை நபி (ஸல்) அனுப்பினார்கள்.*

*குறைஷிகளின் வியாபாரக் கூட்டத்தை இடைமறிப்பதற்காகப் புறப்பட்ட இவர்களிடம் 'கர்ரார்' என்ற இடத்தை தாண்டிச் செல்லக் கூடாது என நபி (ஸல்) அவர்கள வலியுறுத்தினார்கள். இந்தப் படை கால்நடையாகவே சென்றது. பகலில் பதுங்குவதும் இரவில் நடப்பதுமாக வியாழன் காலை கர்ராரை அடைந்தது. ஆனால், அந்த வியாபாரக் கூட்டமோ இவர்கள் சென்றடைவதற்கு ஒரு நாள் முன்னதாகவே அந்த இடத்தைக் கடந்து சென்று விட்டிருந்ததால், இவர்கள் சண்டையின்றித் திரும்பினர். இந்தப் படையின் கொடி வெள்ளை நிறமாக இருந்தது. இதை மிக்தாத் இப்னு அம்ர் (ரழி) ஏந்தியிருந்தார்கள்.*

***இவைகள் போர்களா? வழிப்பறி கொள்ளைகளா?***

*தம்பி, மேற்கண்ட மூன்று நிகழ்ச்சிகளை நீ படித்துள்ளாய். நீ நன்றாக நிதானமாக ஒவ்வொரு வார்த்தையையும் படி, அந்தந்த நிகழ்ச்சியில் சொல்லப்பட்ட சில வரிகளை கீழே தருகிறேன். இவைகளை படித்து இவைகள் வழிப்பறி கொள்ளைகளா அல்லது போர்களா என்று நீயே முடிவு செய்.*

***முதலாவது கொள்ளை** – " ஷாமிலிருந்து மக்காவை நோக்கி வந்து கொண்டிருந்த குறைஷிகளின் வியாபாரக் குழுவை வழி மறிப்பதற்காக இவர்கள் சென்றார்கள்."*

***இரண்டாவது கொள்ளை** - இவர்கள் 'பத்தன் ராபிக்' என்ற இடத்தில் அபூஸுஃப்யானைச் சந்தித்தார்கள். இரு கூட்டத்தார்களும் ஒருவரை நோக்கி ஒருவர் அம்பெய்து கொண்டனர்.*

***மூன்றாவது கொள்ளை** - குறைஷிகளின் வியாபாரக் கூட்டத்தை இடைமறிப்பதற்காகப் புறப்பட்ட இவர்களிடம் 'கர்ரார்' என்ற இடத்தை தாண்டிச் செல்லக் கூடாது என நபி (ஸல்) அவர்கள வலியுறுத்தினார்கள்.*

***கேள்விகள்:***

1. *வியாபாரிகள் தங்கள் வழியே சென்றுக்கொண்டு இருக்கும் போது, அவர்களைத் தாக்கி, பொருட்களை அபகரிக்க ஆட்களை அனுப்பினார் முஹம்மது. இந்த செயலுக்கு என்ன பெயர் வைப்பது?*
2. *ஆயுதங்கள் இல்லாமல், போருக்கு ஆயத்தமில்லாமல் சென்றுக்கொண்டு இருக்கும் வியாபாரிகளை திடீரென்று தாக்குவதற்கு என்ன பெயர்?*
3. *இந்த வகையான வழிப்பறி கொள்ளைகளை செய்ய முஹம்மதுவை தூண்டியது எது?*
4. *மதினாவிற்கு இடம்பெயர்ந்த பிறகு, முஹம்மதுவும் அவரது சகாக்களும் என்ன வியாபரம் புரிந்து சம்பாதித்தார்கள்? அவர்களின் அனுதின உணவிற்கு என்ன செய்தார்கள்? உழவுத்தொழில் செய்தார்களா? ஆடுகளை, ஒட்டகங்களை மேய்த்து சம்பாதித்தார்களா? வெளியூர்களுக்குச் சென்று வியாபாரம் புரிந்தார்களா? முஹம்மது நபியாக மாறுவதற்கு முன்பு நன்றாக வியாபாரம் செய்யக்கூடியவர் இப்போது ஏன் பணத்திற்காக, தங்களுடைய ஏழ்மையை போக்கிக்கொள்வதற்காக கீழ்தரமான வழிப்பறி கொள்ளையில் ஈடுபடவேண்டும்?*

5. இந்த வகையான வழிப்பறி கொள்ளைகளை செய்யும் படி, அல்லாஹ் கட்டளையிடாமல், முஹம்மது தானாக செய்து இருக்கமாட்டார். இப்படியிருக்க, ஒரு இறைவன் வழிப்பறி கொள்ளையில் ஈடுபட அனுமதி கொடுப்பானா?

தம்பி, இன்னும் நான் சொல்லிக்கொண்டே செல்வேன், ஆனால் இதோடு நிறுத்திக்கொள்கிறேன். நீ இவைகள் படித்து, உனக்குத் தெரிந்த பதில்களை கொடுக்கும் படி கேட்டுக்கொள்கிறேன். (என் தம்பி மட்டுமல்ல, எந்த ஒரு முஸ்லிமாக இருந்தாலும் இவைகளுக்கு பதில்களை எழுதி அனுப்பலாம்.)

**திருடுவதை நிறுத்தும் படி பைபிள் கட்டளையிடுகிறது:**

ஒருவன் திருடுகின்றவனாக இருந்தால் தன் திருட்டை நிறுத்துவானாக. அவன் வேலை செய்யத் தொடங்கட்டும். அவன் தனது கைகளை நல்ல செயல்களைச் செய்வதற்குப் பயன்படுத்தட்டும். பிறகு ஏழைகளோடு பகிர்ந்துகொள்ள அவனுக்கென்று சில இருக்கும். (எபேசியர் 4:28)

*10 "ஒரு மனிதன் வேலை செய்யாவிடில் அவன் உண்ணக்கூடாது" என்று உங்களோடு இருந்தபோது நாங்கள் இந்த விதியைத் தந்தோம். (தெச 3:10)*

இப்படிக்கு,

உன் பதிலுக்காக காத்திருக்கும் உன் அண்ணன்

உமர்.

---

**மேற்கண்ட கடிதத்தை கண்டவுடன் என் தம்பி கீழ்கண்ட பதிலை அனுப்பினான்.**

அன்புள்ள அண்ணாவிற்கு,

உங்களின் கடிதம் கண்டேன், உங்களைப் பற்றி வேதனை அடைந்தேன்.

பொதுவாக நீங்கள் எவைகளை எழுதினாலும், ஆதாரங்களோடு எழுதுவீர்கள் என்று நான் அறிவேன். ஆனால், இந்த முறையோ, மற்றவர்களைப் போல ஆதாரங்களை கொடுக்காமல் எழுதியுள்ளீர்கள்.

**உங்களுக்கு ஒரு சவால்**

உங்களுடைய கடிதத்தில் நீங்கள் குறிப்பிட்ட அந்த மூன்று வழிப்பறி கொள்ளைகள் பற்றி நான் இதுவரை எந்த புத்தகத்திலும் படிக்கவில்லை. மேலும், உங்களால் அதற்கான ஆதாரங்களை காட்டமுடியாது. நீங்கள் உலகம் முழுவதும் சுற்றினாலும், எங்கும் இந்த நிகழ்ச்சிகள் நடந்ததாக ஒரு ஆதாரத்தையும் உங்களால் கொண்டுவரமுடியாது என்று நான் சவால் விட்டுச் சொல்கிறேன்.

ஒரே ஒரு இஸ்லாமிய புத்தகத்திலாவது உங்களால் மேற்கண்ட நிகழ்ச்சிகளை எடுத்துக்காட்டமுடியுமா?

முதலாவது நீங்கள் எனக்கு ஆதாரங்களை காட்டுங்கள், அதன் பிறகு நான் உங்கள் கேள்விகளுக்கு பதில்களைச் சொல்வேன்.

இப்படிக்கு,

உங்கள் தம்பி

---

**என் தம்பியின் மெயில் கிடைத்தவுடன் நான் கீழ்கண்ட பதிலை எழுதினேன்:**

*அன்பான தம்பிக்கு,*

*நீ என்னை ஆச்சரியத்தில் ஆழ்த்துவாய் என்று நம்பினேன், ஆனால், நீ ஏமாற்றிவிட்டாய்.*

*நான் வேண்டுமென்றே, என் முந்தைய கடிதத்தில் ஆதாரங்களை தரவில்லை, ஏனென்றால் நான் மேற்கொள் காட்டப்போகும் புத்தகம் இஸ்லாமிய உலகில் புகழ்பெற்ற புத்தகமாகும். நீ ஏற்கனவே இந்த புத்தகத்தை படித்து இருந்திருக்கவேண்டும், ஆனால் நீ தவறிவிட்டாய். சரி இப்போது அந்த முதல் மூன்று வழிப்பறி கொள்ளைப் பற்றி ஆதாரத்தைத் தருகிறேன். அந்த தலைப்புக்களை மட்டும் கொடுத்தேன், மீதமுள்ள நிகழ்ச்சி விவரங்களை கீழ்கண்ட புத்தகத்தின் 200 மற்றும் 201ம் பக்கங்களிலிருந்து எடுத்தேன்.*

***புத்தகத்தின் பெயர்:*** *ரஹீக்*

***ஆசிரியர்:****இஸ்லாமிய பேரறிஞர் ஸஃபிய்யூர் ரஹ்மான்.*

***தமிழாக்கம்:*** *மௌலவி முஃப்தி உமர் ஷரீஃப் காசிமி*

***பக்கம்:*** *200 மற்றும் 201ம் பக்கங்கள்.*

***புத்தகத்தின் தனிச்சிறப்பு:*** *உலகளாகிய போட்டியில் முதல் பரிசு பெற்ற நூல். இந்த புத்தகம் இதர 170 புத்தகங்களோடு போட்டியிட்டு, முதல் பரிசை தட்டிச் சென்றது (ஆங்கிலத்தில்: Ar-Raheeq Al-Makhtum -* ***http://en.wikipedia.org/wiki/Ar-Raheeq_Al-Makhtum****)*

*ஆங்கிலத்தில் இந்த புத்தகத்தை படிக்க:* ***http://www.islamhouse.com/51776/en/en/books/The_Sealed_Nectar***

*தமிழில் இப்புத்தகத்தை படிக்க:* ***http://www.islamkalvi.com/portal/?p=4989***

*தம்பி இந்த புத்தகத்தை முழுவதுமாக ஒரு முறை நீ படிக்கவேண்டும்.*

*உன் கேள்விக்கு நான் பதில் அளித்துவிட்டேன், என் கேள்விகளுக்கு நீ பதில்களைத் தருவாய் என்று எதிர்பார்த்துக் கொண்டு இருக்கிறேன்.*

*உன்னை அடுத்த கடிதத்தில் சந்திக்கிறேன்.*

*இப்படிக்கு*

*உன் அண்ணன்,*

*உமர்*

***மூலம்***

***உமரின் ரமளான் மாத கட்டுரைகள்***

---

### *நாள் 3 - தேன் கூட்டில் கல்லெறிந்து தேனீக்களை கோபமூட்டியது யார்? முஹம்மதுவா? மக்காவினரா?*

*முந்தைய இரண்டு தொடர் கட்டுரைகளை கீழேயுள்ள தொடுப்புகளை சொடுக்கி படியுங்கள்:*

- *2013 ரமளான் நாள் 1 -* ***அன்புள்ள அண்ணாவிற்கு . . . போர் புரிவது அமைதியை நிலைநாட்டுவதற்கு அல்லவா?***
- *2013 ரமளான் நாள் 2 -* ***முஹம்மதுவும் வழிப்பறி கொள்ளைகளும்***

*இப்போது ரமளான் மூன்றாவது நாள் தொடர் கட்டுரையை படிப்போம். என் தம்பி எனக்கு எழுதிய பதிலை முதலாவது படியுங்கள். அதன் பிறகு என் பதில் கடிதத்தை படியுங்கள்.*

***உமரின் தம்பியின் வாதம்: தேன் கூட்டில் கல்லெறிந்து தேனீக்களை கோபமூட்டியது மக்காவினர் தான்!***

*அன்புள்ள அண்ணாவிற்கு,*

*உங்கள் அருமை தம்பி எழுதும் கடிதம்.*

*உங்களது இரண்டாவது கடிதம் கண்டு மிகவும் ஆச்சரியப்பட்டேன். இஸ்லாமிய புத்தகங்கள் எங்கு இருந்தாலும், அவைகளைத் தேடி கண்டுபடித்து நீங்கள் படிக்கிறீர்கள் என்பதை மட்டும் தெளிவாக உணர்ந்துக்கொண்டேன்.*

*நீங்கள் அறிமுகம் செய்த "ரஹீக்" புத்தகத்திற்காக மிக்க நன்றி. இதுவரை அதனை நான் படிக்காதது வேதனைக்குரிய விஷயம் தான். சரி, விஷயத்திற்கு வருகிறேன்.*

*நீங்கள் குறிப்பிட்ட அந்த மூன்று நிகழ்ச்சிகள் நடந்தவைகள் தான். ஆனால், அவைகளுக்கு நீங்கள் பூசிய முலாம் தான் சரியில்லை. இப்போது நான் அதனை உங்களுக்கு விளக்குகிறேன்.*

***ஏன் இறைத்தூதர், குறைஷிகளின்(மக்காவினரின்) வியாபாரிகளை தாக்கி அவர்களிடமிருந்து செல்வங்களை கைப்பற்றினார்:***

*1) மக்காவில் இருக்கும் போது எங்கள் இறைத்தூதர், அமைதியாக இறைச்செய்தியை பிரசங்கித்தார்.*

*2) மக்காவினரின் எதிர்ப்புகளை, கொடுமைகளை சமாளித்துக்கொண்டு வாழ்ந்தார், அதே போல, இதர முஸ்லிம்களும் சகித்துக்கொண்டு இருந்தார்கள். மக்காவினரின் தொல்லைகளுக்கு எல்லை இல்லாமல் போனது.*

*3) மக்காவினர் வன்முறையில் ஈடுபட்டு, கொலை செய்யும் அளவிற்கு சென்ற போது, அவரும் இதர முஸ்லிம்களும் தங்கள் வீடுகளை விட்டு, மற்ற பொருட்களை விட்டுவிட்டு, ஒன்றுமில்லாத நிலையில் மதினாவிற்கு சென்றார்கள்.*

*4) தங்கள் செல்வங்களை மக்காவில் விட்டுவிட்டு, மதினாவில் தஞ்சம் புகுந்தார்கள், தங்கள் நாட்களை வறுமையிலும், துக்கத்திலும் கடத்தினார்கள்.*

*5) முஸ்லிம்களின் செல்வங்களை அபகரித்துக்கொண்டு, அவர்களை கொடுமைப்படுத்தியதினால், மக்காவினரிடமிருந்து தங்களது செல்வங்களை மீட்டுக்கொள்ள அல்லாஹ் அனுமதி அளித்தான்.*

*6) மக்காவினரோடு முஸ்லிம்கள் சண்டையிடுவதற்கு காரணம் அந்த மக்காவினரே, அவர்கள் தான் முதன் முதலாக முஸ்லிம்களை கொடுமைப்படுத்த ஆரம்பித்தார்கள், கொலை செய்ய முயற்சித்தார்கள். எனவே தான் அல்லாஹ் இறைத்தூதருக்கு இவைகளைச் செய்யஅனுமதி அளித்தார்.*

*மேற்கண்ட விவரங்களை சுருக்கமாக சொல்லவேண்டுமென்றால், இரண்டு விஷயங்களாக கூறலாம்.*

*முதலாவதாக, அமைதியாக இருந்த இறைத்தூதர் மீதும், முஸ்லிம்களின் மீதும் வன்முறையை தூண்டி, அவர்களை கொடுமைப்படுத்தியது, கோபப்படுத்தியது மக்காவினர். அதாவது, அமைதியாக இருக்கும் தேன் கூட்டின் மீது கல்லெறிந்தது அந்த மக்காவினர், அதன் பிறகு தேனீக்கள் எங்களை விரட்டி விரட்டி கடிக்கின்றதே என்று அவர்கள் ஒப்பாறி வைத்தால் எப்படி நியாயமாகும்? தேன் கூட்டின் மீது ஏன் முதலாவது கல்லெறியவேண்டும், அதன் பிறகு தேனீக்கள் எங்களை கடிக்கின்றன என்று ஏன் கவலைப்படவேண்டும்?*

*இரண்டாவதாக, முஸ்லிம்கள் மக்காவில் விட்டுவந்த செல்வங்களை மீட்டுக்கொள்ள அல்லாஹ் முஸ்லிம்களுக்கு போர் புரிய அனுமதி அளித்தான்.*

*மதினாவிற்கு சென்ற பிறகு ஏன் இறைத்தூதர் போர் புரிந்தார் என்பதை இப்போது உங்களுக்கு புரிந்திருக்கும் என்று நான் நம்புகிறேன். இதற்கு மேலும் இந்த நிகழ்ச்சிகளை காரணம் காட்டி எங்கள் இறைத்தூதர் மீது உங்களால் குற்றச்சாட்டுகளை முன்வைக்கமுடியாது என்று நம்புகிறேன்.*

*என் அருமை அண்ணே, இந்த அடி (விவரம்) போதுமா? இன்னும் கொஞ்சம் வேணுமா?*

*இப்படிக்கு,*

*உங்கள் பதிலுக்காக காத்திருக்கும்,*

*உங்கள் தம்பி*

---

*[என் தம்பியுடைய மேற்கண்ட கடிதத்திற்கு, நான் எழுதிய பதில் கடிதத்தை இப்போது படியுங்கள்]*

### உமரின் வாதம்: தேன் கூட்டில் கல்லெறிந்து தேனீக்களை கோபமூட்டியது முஹம்மது தான்!

*அன்புள்ள தம்பிக்கு,*

*அண்ணன் உமரின் வாழ்த்துதல்கள்.*

*உன் விவாதங்களில் கொஞ்சம் சூடு (விஷயங்கள்) அதிகமாகிக்கொண்டு இருக்கிறதை என்னால் காணமுடிகின்றது. இதற்காக என் வாழ்த்துதல்களை மறுபடியும் சொல்லிக்கொள்கிறேன். என் முந்தைய கடிதத்தில் நான் மேற்கோள் காட்டிய 3 வழிப்பறி கொள்ளைகள் பற்றி உன்னால் பதில் சொல்லமுடியாது என்று நான் நினைத்தேன், ஆனால், ஒரு முஸ்லிமுக்கே இருக்கும் தனிச்சிறப்போடு நீ பதில் சொன்னது என்னை சிறிது நேரம் ஆச்சரியத்தில் ஆழ்த்தியது.*

*இஸ்லாமிய புத்தகங்களை எதிராளி படித்து இருக்கமாட்டான் என்ற நினைப்போடு பேசுவதும், எழுதுவதும் முஸ்லிம்களுக்கு வாடிக்கையாகிவிட்டது. அதே நிலையில் இருந்துக்கொண்டு நீயும் என்னிடம் சவால் விட்டாய். உங்களால் ஆதாரங்களை தரமுடியாது என்று சிங்கம் போல கர்ஜித்தாய். ஆனால், நான் ஒரு விஷயத்தை வேண்டுமென்றே சொல்லாமல் இருந்தால், அதற்கு பின்னால் ஒரு காரணம் இருக்கும் என்பதை நீ அறியாமல் இருந்தாய். நீ இனியாவது என்னை சரியாக புரிந்துக்கொள்.*

*இப்போது, உன் கடிதத்தில் நீ முன்வைத்த விவரங்களை சிறிது ஆராய்வோம், நீ சொன்னவைகளில் உண்மை இருக்கின்றதா என்பதை உரசிப் பார்ப்போம்.*

*நீ இரண்டு விவரங்களை முன்வைத்தாய், 1) முதன் முதலாக தேன் கூட்டின் மீது கெல்லெறிந்தது மக்காவினர் தான் என்று நீ சொன்னாய். 2) முஸ்லிம்கள் விட்டுவந்த செல்வங்களை மறுபடியும் மீட்டுக்கொள்ளவே, மக்காவினரின் வியாபாரிகளை முஸ்லிம்கள் தாக்கினார்கள் என்று கூறினாய்.*

*நீ முதலாவது கூறிய விஷயத்தைப் பற்றி இப்போது நான் உனக்கு எழுதுகிறேன்.*

### தேன் கூட்டின் மீது கல்லெறிந்தது முஹம்மது தான்

*மக்காவினர்தான் முஹம்மதுவையும், முஸ்லிம்களையும் முதலாவது தொந்தரவு செய்தார்கள் என்பது உண்மையல்ல. முதலாவது முஹம்மது தான் சும்மா இருந்த மக்காவினர் மீது கல்லெறிந்தார், அவர்களை தொந்தரவு செய்தார், அதன் பிறகு தான் அவர்கள் இவருக்கு பிரச்சனை*

கொடுக்க ஆரம்பித்தார்கள். இதனை நான் சொல்லவில்லை, இஸ்லாமிய நூல்கள் சொல்கின்றன. இப்போது அவைகளை பார்ப்போம்.

***முஹம்மதுவின் ஆரம்பகால பிரச்சாரம் பற்றி அல்-தபரி தன்னுடைய சரித்திர நூலில் கீழ்கண்ட விவரங்களை கொடுக்கிறார்:***

*அ) முஹம்மது தம்முடைய ஜனங்களுக்கு இறைச்செய்தியை வெளிப்படையாக அறிவித்தார். இப்படி அவர் அறிவிக்கும் போது, மக்காவினர் இவரை எதிர்க்க வில்லை. ஆனால், முஹம்மது அவர்களது தெய்வங்களை விமர்சித்து, மதிப்பு குறைவாக பேசும் போது மக்காவினர் இவரை எதிர்க்க ஆரம்பித்தார்கள்.*

*ஆ) முஹம்மது இப்படி குறைஷிகளின் தெய்வங்களை விமர்சிக்கும் போது, அவர்கள் நேரடியாக முஹம்மதுவின் தந்தையின் சகோதரர் அபூ தலிப் அவர்களிடம் வந்து கீழ்கண்டவாறு முறையிட்டார்கள்.*

*"அபூ தலிப் உங்கள் சொந்தக்காரர் [முஹம்மது] எங்கள் தெய்வங்கள் பற்றி தவறாக பேசுகிறார், நம் மதத்தை பகிரங்கமாக குற்றஞ்சாட்டுகிறார். நம்முடைய கலாச்சாரத்தை ஏளனம் செய்கிறார் மற்றும் நம்முடைய முற்பிதாக்கள் வழிதவறியவர்கள் என்றுச் சொல்கிறார். அவர் எங்கள் மீதான தன் குற்றச்சாட்டுக்களை நிறுத்திக்கொள்ளும்படி செய்யும்,அல்லது நாங்கள் அவருக்கு தகுந்த பதில் அளிக்க (ஒரு கை பார்க்கும் படி) எங்களுக்கு அனுமதி அளியும். நாங்கள் எப்படி அவருக்கு எதிராக இருக்கிறோமோ, அதே போல நீரும் இருக்கிறீர், உங்களுக்காக வேண்டுமானால் நாங்கள் அவரை பார்த்துக்கொள்கிறோம். Tabari, vol 6, pages 93, 94.*

*இ) ஆனால், அபூ தலிப் அவர்களோ, முஹம்மதுவை ஆதரித்து பாதுகாத்து வந்தார்கள்.*

*ஈ) தங்களுக்கு நீதி கிடைக்காததால், குறைஷிகள், அபூ தலிப் மரிக்கும் வரை காத்திருந்தார்கள்.*

*உ) அவர் மரித்ததும், தங்கள் தெய்வங்களை கேவலப்படுத்திய முஹம்மதுவை கொலை செய்ய முயற்சி எடுத்தார்கள். இதிலிருந்து தப்பித்து அவர் மதினாவிற்கு இடம்பெயர்ந்தார். (பார்க்க **http://www.answering-islam.org/Shamoun/antagonizing.htm** & **http://www.answering-islam.org/tamil/christians/lom_seminar3.html**)*

*முஹம்மதுவிற்கு குறைஷிகள் செய்தது தவறு ஆகும் மேலும் அது அநீதியாகும் என்று நீ சொல்லலாம். அப்படியானால், கீழ்கண்ட விவரங்களை படித்து அதையும் தவறு என்றும், அநீதி என்றும் உன்னால் சொல்லமுடியுமா?*

***இன்று மக்காவில் ஒரு புதிய நபி எழும்பினால், இஸ்லாமியர்கள் என்ன செய்வார்கள்?***

*மக்கா என்பது முஸ்லிம்களின் புனிதஸ்தலம் என்று உலக மக்கள் அனைவருக்கும் தெரியும். இந்த காலகட்டத்தில், மக்கா நகரில் பிறந்த ஒருவர், திடீரென்று ஒரு நாள், காபாவின் அருகில் வந்து, கீழ்கண்ட விதமாக கூறுகிறார் என்று வைத்துக் கொள்வோம்:*

*அ) நான் ஒரு நபியாக இருக்கிறேன்.*

*ஆ) முஸ்லிம்களாகிய நீங்கள் பின்பற்றும் தொழுகை முறைகள், ஹஜ் சட்டங்கள் அனைத்தும் தவறானவது. இவைகளை பின் பற்றினால் நீங்கள் நரகத்திற்குச் செல்வீர்கள்.*

*இ) அல்லாஹ் என்னை நபியாக ஆக்கியுள்ளான். நீங்கள் பின்பற்றும் அனைத்தையும் மாற்றும் படி எனக்கு அறிவித்து உள்ளான். முஹம்மது சொன்னது அனைத்தும் பொய்யானவைகளாகும். அவைகளை பின் பற்றினால் நரகம் நிச்சயம்.*

*ஈ) எனவே, என்னை பின் பற்றுங்கள், நான் உங்களுக்கு நேரான வழியை காட்டுவேன்.*

*மேற்கண்ட விதமாக ஒருவர் மக்காவில் இன்று பிரச்சாரம் செய்தால், அவனை முஸ்லிம்களாகிய நீங்கள் என்ன செய்வீர்கள். மேலும் இந்த மனிதர், ஒரு நல்லவராக நீதியுள்ளவராக இதுவரை*

*வாழ்ந்துள்ளார் என்று வைத்துக்கொள்வோம். இதர மக்கள் சொல்வதை எதையும் கேட்காமல், தான் சொன்னது தான் உண்மை என்று இவர் வாதிக்கிறார், மேலும், இவரது இறைச்செய்தியைக் கேட்டு சிலர் இவரை நபி என்று நம்பி, இவரை பின் பற்றுகிறார்கள் என்று வைத்துக்கொள்வோம்.*

*இப்போது இவரைப் பற்றி மக்கா முஸ்லிம்கள் என்ன செய்வார்கள்? என்னைக் கேட்டால், இவர் கூடிய சீக்கிரமே முஸ்லிம்களால் கொல்லப்படுவார் என்றுச் சொல்வேன். தம்பி, இது தானே உன்னுடைய பதிலாகவும் இருக்கும்.*

*இப்போதுச் சொல், இவருக்கு முஸ்லிம்கள் செய்வது தவறு இல்லையா? அநீதி இல்லையா?*

### *அன்று குறைஷிகள், இன்று முஸ்லிம்கள்:*

*இன்று இவருக்கு முஸ்லிம்கள் என்ன செய்வார்களோ, அதே செயலை அன்று குறைஷிகள் முஹம்மதுவிற்கு செய்ய முடிவு செய்தார்கள். இந்த இரண்டு நிகழ்ச்சிகளும் ஒன்று தான். அன்று முஹம்மது, இன்று இந்த புதிய நபி. அன்று குறைஷிகள், இன்று முஸ்லிம்கள். அன்று குறைஷிகளின் புனித ஸ்தலம், இன்று முஸ்லிம்களின் புனித ஸ்தலம்.*

*தம்பி, முதலாவது குறைஷிகளை தன் வார்த்தைகளால் தாக்கியது முஹம்மது. அவர்களின் தெய்வங்களை கேவலப்படுத்தியது முஹம்மது. அவர்களின் மனதிற்கு துக்கத்தைக் கொடுத்தது முஹம்மது. முஹம்மது சொன்னது உண்மையோ, பொய்யோ அதுவல்ல பிரச்சனை, மக்களின் நம்பிக்கையை தாக்கி நாம் பேசும் போது, எதிர்ப்புக்கள் வரத்தான் செய்யும். பல நூற்றாண்டுகளாக உண்மை என்று நம்பிக்கொண்டு வாழும் மக்களிடம் வந்து, உன் மூதாதையர்கள் செய்தது எல்லாம் வீண், அவைகளால் உங்களுக்கு நன்மையில்லை என்றுச் சொன்னால், எந்த மனுஷன் தான் சும்மா இருப்பான்? இப்படி எதிர்ப்பு வேண்டாமென்று விரும்புகிறவர்கள், வாயை மூடிக்கொண்டு சும்மா இருக்கவேண்டும்.*

*ஆக, முஹம்மதுவின் விஷயத்திற்கு வந்தால், தேன் கூட்டின் மீது முதலாவது கல்லெறிந்து அதை கலைத்தது முஹம்மது ஆவார். மக்காவினர் அனேக வழிமுறைகள் மூலமாக முஹம்மதுவோடு சமாதானம் செய்துக்கொள்ளலாம் என்று விரும்பினார்கள், அபூ தலிப் அவர்களிடம் முறையிட்டார்கள், ஆனால், நன்மை ஒன்றும் ஏற்படவில்லை, முஹம்மது, அவர்களின் தெய்வங்களை தாக்கி பேசுவதை நிறுத்திக்கொள்ளவில்லை. எனவே, இன்று முஸ்லிம் செய்யும் வேலையை அன்று குறைஷிகள் செய்தார்கள். இன்றுள்ள முஸ்லிம்களும், அன்று இருந்த குறைஷிகளும் ஒரே படகில் தான் பிரயாணப்பட்டுக் கொண்டு இருந்தார்கள்.*

*எனவே, முஹம்மதுவின் செயல்கள் தான், குறைஷிகளை வன்முறையில் ஈடுபடவைத்தது. எனவே, இங்கு குற்றவாளி முஹம்மது தானே தவிர குறைஷிகள் அல்ல.*

*தம்பி, உன்னுடைய முதலாவது கேள்விக்கு நான் பதில் சொல்லியுள்ளேன். உன் இரண்டாவது கேள்விக்கு அடுத்தமுறை பதில் எழுதுகிறேன். அதாவது முஹம்மது வழிப்பறி கொள்ளையில் ஈடுபட்டது, தான் விட்டுவந்த செல்வங்களை மீட்டுக்கொள்ளவே என்ற உன் விளக்கத்திற்கு பதிலை அடுத்த கடிதத்தில் எழுதுகிறேன்.*

*இந்த கடிதத்திற்கு நீ பதில்களை எழுதுவாய் என்று நினைக்கிறேன்.*

*இப்படிக்கு,*

*உன் அண்ணன்*

*உமர்*

*மூலம்*

*உமரின் ரமளான் மாத கட்டுரைகள்*

**நாள் 4 - பதிலுக்கு பதில்: நீங்கள் செல்வங்களை எடுத்துக்கொண்டீர்கள், நாங்கள் கொள்ளையடிக்கிறோம்**

*முந்தைய மூன்று தொடர் கட்டுரைகளை கீழேயுள்ள தொடுப்புகளை சொடுக்கி படியுங்கள்:*

- *2013 ரமளான் நாள் 1 -* ***அன்புள்ள அண்ணாவிற்கு . . . போர் புரிவது அமைதியை நிலைநாட்டுவதற்கு அல்லவா?***
- *2013 ரமளான் நாள் 2 -* ***முஹம்மதுவும் வழிப்பறி கொள்ளைகளும்***
- *2013 ரமளான் நாள் 3 -* ***தேன் கூட்டில் கல்லெறிந்து தேனீக்களை கோபமூட்டியது யார்? முஹம்மதுவா? மக்காவினரா?***

*முஹம்மதுவும், முஸ்லிம்களும் மக்கா வியாபாரிகளை வழியில் மடக்கி கொள்ளையிட்டது நியாயமா? என்று கேட்டதற்கு, என் தம்பி கீழ்கண்ட பதிலை கொடுத்தான்:*

- *முதன் முதலில் மக்காவினர் தான் முஹம்மதுவை தாக்கினார்கள். எனவே, அவர்களுக்கு முஹம்மது பதிலடி கொடுத்தார்.*
- *முஸ்லிம்கள் மக்காவில் விட்டுவந்த செல்வங்களை மக்காவினர் எடுத்துக்கொண்டனர். அச்செல்வங்ளை மீட்டுக்கொள்ள அல்லாஹ் முஸ்லிம்களுக்கு போர் புரிய அனுமதி அளித்தான்.*

*மேற்கண்ட இரண்டு விவரங்களில் முதலாவது விவரத்திற்கு, மூன்றாம் பாகத்தில் பதில் அளித்துள்ளேன். இந்த கட்டுரையில் நாம் இரண்டாவது விவரத்திற்கு பதிலைக் காண்போம்.*

---

*அன்புள்ள தம்பிக்கு,*

*நான் என் முந்தைய கடிதத்தில் சொன்னது போல, இந்த கடிதத்தில், செல்வங்களை மீட்டுக்கொள்ள முஸ்லிம்கள் போர் புரிந்தார்கள் என்று நீ சொன்ன விவரத்திற்கு என் பதிலை இப்பொது தருகிறேன். நிதானமாக படித்துப் பார்த்து சிந்தி.*

**பதிலுக்கு பதில்:**

**குறைஷிகளே! நீங்கள் ஒரு முறை கொள்ளையடித்தீர்கள், முஸ்லிம்களாகிய நாங்கள் அனேக முறை கொள்ளையடிக்கிறோம்**

***1) வழிப்பறி கொள்ளையில் ஈடுபட அல்லாஹ் அனுமதியளித்தார்:***

*மதினாவிற்கு முஹம்மது சென்றபிறகு, அனேக வழிப்பறி கொள்ளைகளில் ஈடுபட்டார். அதாவது, குறைஷி வியாபாரிகள் தங்கள் வியாபார பொருட்களோடு நாடு திரும்பிக்கொண்டு இருக்கும் போது, முஸ்லிம்கள் வழியில் பதுங்கியிருந்து, அவர்கள் மீது திடீர் தாக்குதல் செய்து, சண்டையிட்டு, கொலை செய்து, பொருட்களை அபகரித்தார்கள். இப்படி முஸ்லிம்கள் கொள்ளையடிப்பது நியாயமா? என்று கேள்வி கேட்டால், "இதற்கு அல்லாஹ் எங்களுக்கு அனுமதி அளித்தான், முஸ்லிம்களை வீடுகளிலிருந்து துரத்தி, அவர்களின் பொருட்களை அபகரித்த மக்காவினரிடமிருந்து தங்கள் பொருட்களை மீட்டுக்கொள்ள அல்லாஹ் அனுமதி அளித்தான். இது நியாயமானது தான்" என்று முஸ்லிம்கள் பதில் அளிப்பார்கள்.*

*முதல் முறை இவைகளை கேள்விப்படுபவர்கள், "ஆம் முஸ்லிம்கள் சொல்வது சரியானது தான் என்று நினைப்பார்கள்". ஆனால், இவைகளை ஆழமாக ஆராய்ந்தால், இஸ்லாம் இறைவனால் உண்டான மார்க்கம் அல்ல என்பதை புரிந்துக்கொள்ளலாம்.*

***2) உழைத்து வாழவேண்டும், பிறரை அழித்து வாழக்கூடாது – முஸ்லிம்களின் வறுமையை அல்லாஹ் எப்படி நீக்கினார்?***

இஸ்லாமுடைய ஆரம்ப காலத்தைப் பார்த்தால் மிகவும் அருமையாக இருக்கும். முஹம்மது தனக்கு இறைச்செய்து வந்தது என்றுச் சொல்லுதல், அதனை அவர் தன் மக்களிடம் பகிர்ந்துக்கொள்ளுதல், சிலர் அவரை எதிர்ப்பதும், சிலர் அவரை ஆதரிப்பதுமாக நிகழ்ச்சிகள் தொடர்ந்துக்கொண்டு இருந்தது. முஹம்மது குறைஷிகளின் தெய்வங்கள் பற்றி அதிகமாக விமர்சிக்க ஆரம்பித்தார், இவரின் வாயை மூடுவதற்கு குறைஷிகள் எடுத்த முயற்சிகள் தோல்வி அடைந்தது. எனவே, இவரின் உயிரையே எடுக்க அவர்கள் எண்ணினர், இதர முஸ்லிம்களுக்கு அனேக தொல்லைகளை கொடுத்தனர். இதனால் முஸ்லிம்களும், முஹம்மதுவும் தங்கள் வீடுகளை விட்டும், செல்வங்களை விட்டும், உயிர் தப்ப மதினாவிற்கு சென்றுவிட்டனர். இதுவரை நடந்தது எல்லாம், புதிய மார்க்கத்தை பரப்பும் ஒவ்வொருவரும் சந்திக்கும் எதிர்ப்புகளாகும். இஸ்லாமும் இப்படிப்பட்ட எதிர்ப்பிற்கு உள்ளானது ஒன்றும் புதிய விஷயமல்ல.

ஆனால், இதன் பிறகு நடந்த நிகழ்ச்சிகள் தான் இஸ்லாமின் உண்மை முகத்தை நமக்கு காட்டுகிறது.

அ) மதினாவிற்கு முஸ்லிம்கள் வெறுங்கையோடு வந்து சேர்ந்தார்கள். இவர்களின் வறுமையை எப்படி நீக்குவது? பொதுவாக தங்கள் வறுமையை போக்கிக்கொள்ள மக்கள் கடினமாக உழைப்பார்கள்.

ஆ) ஒரு மனிதன் பக்தியுள்ளனோ அல்லது பக்தியில்லாதவனோ, எவனாக இருந்தாலும் சரி, "உழைப்பு உயர்வு தரும்" என்ற சொல்லுக்கு இணங்க, அவன் கடினமாக உழைத்தால் அவனுடைய வறுமை நீங்கி அவன் உயருவான்.

இ) ஆனால், முஸ்லிம்களின் கதையை கண்டால், உழைப்பு மீது அவர்களுக்கு நம்பிக்கையில்லை என்பது போல் உள்ளது. தம்பி, இந்த கேள்விகளுக்கு பதில் தர உன்னால் முடியுமா?

மதினாவில் முஹம்மதுவும், அவரோடு இடம்பெயர்ந்த முஸ்லிம்களும் என்ன தொழில் செய்தார்கள்? உழவுத் தொழில் செய்தார்களா? ஆடுகளையும், ஒட்டகங்களையும் மேய்த்து தங்கள் குடும்பத்துக்கு தேவையான உணவை சம்பாதித்தார்களா? வேறு நாட்டுக்குச் சென்று வியாபாரம் செய்து, அதன் மூலம கிடைத்த செல்வங்களினால் தங்கள் வறுமையை போக்கிக்கொண்டார்களா?

ஈ) அல்லாஹ் உண்மையான இறைவனாக இருந்திருந்தால், தன்னை நம்பி வெறுங்கையோடு மதினா வந்த முஸ்லிம்களை உழைக்கச் சொல்லி, அதன் மூலம் கிடைக்கும் பணத்தை அவன் ஆசீர்வதித்து இருந்திருப்பான்.

உ) குறைஷிகள் உங்களை துரத்தி, உங்கள் உடைமைகளை எடுத்துக்கொண்டார்கள், ஆகையால், அவர்களின் வியாபாரிகளை வழிகளில் திடீரென்று தாக்கி, அவர்களின் உடைமைகளை நீங்கள் கொள்ளையடித்துக் கொள்ளுங்கள் என்று இறைவன் கூறுவானா? இப்படி கூறுபவன் இறைவனா?

ஊ) அவன் உன்னை கொள்ளையிட்டான், ஆகையால் நீயும் அவனை கொள்ளையிடு – இதுவா இஸ்லாமின் கோட்பாடு. தம்பி, அல்லாஹ்வின் இந்த செயல் மிகவும் கேவலமாக உள்ளது.

எ) முஸ்லிம்களின் வறுமையை போக்க, அல்லாஹ் கொடுத்த இந்த வழிமுறை கேவலமானதாகும், இது அநியாயமாகும். நல்ல முஸ்லிம்களை திருடர்களாக அல்லாஹ் மாற்றியது அநீதியாகும். மக்காவில் நல்ல பெயரோடு வாழ்ந்து வந்த முஹம்மதுவை ஒரு கொள்ளைக்கூட்டத்துக்கு தலைவனாக அல்லாஹ் மாற்றியது அநீதியாகும்.

***3) செல்வங்களை மீட்டுக்கொள்ள போர் புரியுங்கள் என்று குர்-ஆன் (2:217) சொல்லவில்லையே!***

தம்பி, நீயும் முஸ்லிம்களைப் போலவே இஸ்லாமுடைய தர்மசங்கடமான செயல்களிலிருந்து அதனை காப்பாற்ற சாக்குபோக்குகளை சொல்லிக்கொண்டு இருக்கிறாய்.

அந்த காலத்தில் "புனித மாதங்கள்" என்று சில மாதங்களை (நான்கு) கருதினார்கள். இந்த மாதங்களில் போர் புரிவதோ, இதர வன்முறைகளில் ஈடுபடுவதோ கிடையாது. ஆனால், இதனையும் மீறி முஸ்லிம்கள் குறைஷிகளை இம்மாதங்களில்

*கொள்ளையடித்தார்கள். குறைஷிகள் இதனை மற்றவர்களிடம் பரப்ப ஆரம்பித்துவிட்டார்கள். முஸ்லிம்களுக்கும், முஹம்மதுவிற்கும் மிகவும் அவமானமாகிவிட்டது. இதனால், முஹம்மது ஒரு வசனத்தை இறக்கி முஸ்லிம்களின் செயல்கள் நியாயமானவைகள் தான், என்று அல்லாஹ் சொல்வது போல வசனத்தை இறக்கிவிட்டார். இதனை குர்-ஆன் 2:217ம் வசனத்தில் காணலாம்.*

*2:217 புனித மாதத்தில் போர் செய்வது குறித்து உம்மிடம் கேட்கின்றனர். 'அதில் போரிடுவது பெருங்குற்றமே. அல்லாஹ்வின் பாதையை விட்டும், மஸ்ஜிதுல் ஹராமை விட்டும் (மற்றவர்களைத்) தடுப்பதும், அவனை ஏற்க மறுப்பதும், அதற்கு (மஸ்ஜிதுல் ஹராமுக்கு) உரியோரை அங்கிருந்து வெளியேற்றுவதும் அல்லாஹ் விடம் இதை விடப் பெரியது. கொலையை விட கலகம் மிகப் பெரியது' எனக் கூறுவீராக! அவர்களுக்கு இயலுமானால் உங்கள் மார்க்கத்தை விட்டும் உங்களை மாற்றும் வரை உங்களுடன் போரிட்டுக் கொண்டே இருப்பார்கள். உங்களில் தனது மார்க்கத்தை விட்டும் மாறி (ஏக இறைவனை) மறுப்போராக மரணித்தவரின் செயல்கள் இவ்வுலகிலும் மறுமையிலும் அழிந்து விடும். அவர்கள் நரகவாசிகள். அதில் அவர்கள் நிரந்தரமாக இருப்பார்கள். (2:217) பீஜே தமிழாக்கம்*

*2:217. (நபியே!) புனிதமான (விலக்கப்பட்ட) மாதங்களில் போர் புரிவது பற்றி அவர்கள் உம்மிடம் கேட்கிறார்கள்; நீர் கூறும்: "அக்காலத்தில் போர் செய்வது பெருங் குற்றமாகும்; ஆனால், அல்லாஹ்வின் பாதையை விட்டுத் தடுப்பதும், அவனை நிராகரிப்பதும், மஸ்ஜிதுல் ஹராமுக்குள் (வரவிடாது) தடுப்பதும், அங்குள்ளவர்களை அதிலிருந்து வெளியேற்றுவதும் (-ஆகியவையெல்லாம்) அதைவிடப் பெருங் குற்றங்களாகும்; ஃபித்னா (குழப்பம்) செய்வது, கொலையைவிடக் கொடியது; அவர்களுக்கு இயன்றால் உங்கள் மார்க்கத்திலிருந்து உங்களைத் திருப்பிவிடும் வரை உங்களுடன் போர் செய்வதை நிறுத்த மாட்டார்கள்; உங்களில் எவரேனும் ஒருவர் தம்முடைய மார்க்கத்திலிருந்து திரும்பி, காஃபிராக (நிராகரிப்பவராக) இறந்துவிட்டால் அவர்களின் நற்கருமங்கள் இவ்வுலகத்திலும், மறு உலகத்திலும் (பலன் தராமல்) அழிந்துவிடும்; இன்னும் அவர்கள் நரகவாசிகளாக அந்நெருப்பில் என்றென்றும் தங்கிவிடுவார்கள்." (முஹம்மது ஜான் டிரஸ்ட் தமிழாக்கம்)*

*இங்கு கவனிக்கவேண்டிய விஷயம் என்னவென்றால், குறைஷிகளிடமிருந்து தங்களின் செல்வத்தை திரும்பபெற போர் செய்வதாக முஸ்லிம்கள் சொல்வது எல்லாம் பொய்யாகும். இந்த வசனம் அதைப் பற்றிச் சொல்லவில்லை. ஒட்டு மொத்த குறைஷிகளின் செயல்களுக்கு பதிலடியாக இந்த வழிப்பறி கொள்ளைகள் நடக்கின்றன என்று மேற்காணும் குர்-ஆன் வசனம் கூறுகிறது.*

*புனித மாதங்களில் போர் செய்வது பெருங்குற்றமாகும் என்று அல்லாஹ் ஒப்புக்கொள்கிறார். ஆனால், குறைஷிகளின் செயல்கள் அவைகளை விட பெருங்குற்றம் என்று அல்லாஹ் சொல்கிறார்.*

*அதாவது, முஸ்லிம்கள் பெருங்குற்றங்களைச் செய்ய அனுமதி அளித்துள்ளார், அவர்களுக்கு வக்காளத்து வாங்குகிறார்.*

*ஆக, வெறும் செல்வங்களை திரும்ப பெறத் தான் வழிப்பறி கொள்ளைகளில் முஸ்லிம்கள் ஈடுபட்டார்கள் என்றுச் சொல்வது தவறாகும். இதனை நாம் மேற்கண்ட வசனத்தின் மூலம் அறியலாம்.*

*தம்பி, நீ சொல்வது போல ஒரு பேச்சுக்காக நாம் ஏற்றுக்கொண்டாலும், அதிலும் அனேக சிக்கல்கள் உள்ளன:*

*அ) விட்டு வந்த செல்வங்களை திரும்பப் பெற வேண்டுமென்றால், ஏன் நேரடியாக மக்காவிற்குச் சென்று, போர் புரிந்து செல்வங்களை மட்டும் கொண்டு வந்து இருக்கக்கூடாது?*

*ஆ) ஏன் வழிப்பறி கொள்ளையில் ஈடுபட்டு, திடீர் தாக்குதல் நடத்தவேண்டும்?*

*இ) விட்டுவந்த செல்வங்களை திரும்ப பெறுவதற்கு பதிலாக, வழிப்பறிக் கொள்ளையில் ஈடுபட்டு, ஏன் மனிதர்களை கொல்லவேண்டும்?*

*ஈ) செல்வங்களுக்காக மனிதர்களை கொலை செய்வது இஸ்லாமில் நியாயமானதா?*

*உ) வெறும் பணத்திற்காக மனிதர்களை கொலை செய்ய அனுமதிக்கும் இறைவன் ஒரு இறைவனா?*

*ஊ) பணத்திற்காக உயிரை எடுக்கும் மார்க்கத்தில் எப்படி மேன்மையான நல்ல குணங்கள் உள்ள மனிதர்களைக் காணமுடியும்?*

*எ) மதினாவில் முஹம்மது மற்றும் அவரது குழுவின் வறுமையை போக்க, அல்லாஹ்விற்கு இப்படி கொள்ளையடிப்பதைத் தவிர வேறு வழியே தெரியவில்லையா?*

*ஏ) பல இலட்ச மக்களின் பசியை போக்க வானத்திலிருந்து தினமும் உணவை கொண்டு வந்தவன், சில நூறு மக்களின் உணவுப் பிரச்சனையை தீர்க்க, வழிப்பறி கொள்ளையை தெரிவு செய்வது கேவலமாக இல்லையா?*

***முடிவுரை:** தம்பி, மேற்கண்ட விவரங்களிலிருந்து நாம் அறிவது என்னவென்றால், முஹம்மதுவிற்கு ஆட்களின் பலம் அதிகமானதும், அவர் வலியச் சென்று சண்டையிட்டார், கொள்ளையிட்டார். இப்படிப்பட்ட கோட்பாடுகள் உடைய மார்க்கத்தில் நீதி எங்கேயிருந்து வரும்? மன்னிப்பு எங்கேயிருந்து வரும்? இதனை பின்பற்றும் மக்கள் எப்படி சமுதாயத்திற்கு நன்மை செய்யும் மக்களாக இருக்கமுடியும்?*

*• நீ என்னை அடித்தாய், இதோ நான் உன்னை கொலை செய்கிறேன்.*

*• எனக்கு ஒரு தீமையை புரிந்தாய், இதோ நான் உனக்கு அனேக தீமைகளை செய்கிறேன்.*

*• நீ என்னையும், என் மார்க்கத்தையும் ஏற்றுக்கொள்ளவில்லை, ஆகையால் உன்னை அழித்துவிடுகிறேன்.*

*இப்படியெல்லாம் கோட்பாடுகளை கொண்டுள்ள இஸ்லாம் எப்படி ஒரு அமைதி மார்க்கமாக மாறும்.*

*தம்பி, சிறிது சிந்தித்துப் பார். குறைஷிகளின் இடத்தில் முஸ்லிம்கள் இருப்பதாக கற்பனை செய்துக்கொள். உங்கள் இடத்தில் குறைஷிகள் இருப்பதாக கற்பனை செய்துக்கொள். அவர்களிலிருந்து ஒரு நபி தோன்றி உங்கள் அல்லாஹ்வை விமர்சிக்கிறார் என்று வைத்துக்கொள். அப்போது முஸ்லிம்கள் எப்படி செயல்படுவார்கள்? அமைதியாக இருப்பார்களா? குறைஷிகள் எப்படி நடந்துக்கொண்டார்களோ, அதைவிட 100 மடங்கு அதிகமாக நீங்கள் நடந்துக்கொள்வீர்கள். இதில் எந்த ஒரு சந்தேகமும் இல்லை.*

*தம்பி, நான் மேலே சொன்ன விவரங்களை சிறிது நேரம் ஒதுக்கி சிந்தித்துப்பார். சத்தியத்தை அறிந்துக்கொள், அது உன்னை விடுதலையாக்கும்.*

*தம்பி ஒரு முக்கியமான விஷயத்தை உனக்கு கடைசியாக சொல்ல விரும்புகிறேன்.*

*முஹம்மது உயிருக்கு பயந்து மதினாவிற்கு தப்பித்துச் சென்றுவிட்டபிறகு, அலி மூன்று நாட்கள் மக்காவில் தங்கியிருந்து. முஹம்மதுவிற்கு வரவேண்டிய பணத்தையெல்லாம் சேகரித்துக்கொண்டாராம்:*

*Ali stayed in Mecca for three days and nights until he had restored the deposits which the apostle held. (Ibn Ishaq/Hisham 335, page 227 – The Life of Muhammad, A translation of Ibn Ishaq's Sirat RAhul Allah by A. Guillaume)*

*இப்படிக்கு,*

***உன் அண்ணன்***

*உமர்*

[மூலம்](#)

[உமரின் ரமளான் மாத கட்டுரைகள்](#)

---

***நாள் 5 - முஸ்லிம் குருசேடர்களும் கிறிஸ்தவ குருசேடர்களும் (ஜிஹாதும் சிலுவைப்போர்களும்)***

*முந்தைய நான்கு தொடர் கட்டுரைகளை கீழேயுள்ள தொடுப்புகளை சொடுக்கி படிக்கலாம்:*

- *2013 ரமளான் நாள் 1 -* ***அன்புள்ள அண்ணாவிற்கு . . . போர் புரிவது அமைதியை நிலைநாட்டுவதற்கு அல்லவா?***
- *2013 ரமளான் நாள் 2 -* ***முஹம்மதுவும் வழிப்பறி கொள்ளைகளும்***
- *2013 ரமளான் நாள் 3 -* ***தேன் கூட்டில் கல்லெறிந்து தேனீக்களை கோபமூட்டியது யார்? முஹம்மதுவா? மக்காவினரா?***
- *2013 ரமளான் நாள் 4 -* ***பதிலுக்கு பதில்: நீங்கள் செல்வங்களை எடுத்துக்கொண்டீர்கள், நாங்கள் கொள்ளையடிக்கிறோம்***

---

***அன்புள்ள தம்பிக்கு,***

*உன் அண்ணன் உமர் எழுதும் கடிதம். உன் முந்தைய கடிதத்தை படிக்கும் போது, இதை எழுதியது என் தம்பி தானா? என்ற சந்தேகம் எனக்கு எழுந்தது. நீ மிகவும் கோபமாக எழுதியிருந்தாய். நீ கீழ்கண்ட கேள்விகளை கேட்டு இருந்தாய்:*

*அ) முஹம்மதுவும் சஹாபாக்களும் செய்ததை அல்லாஹ் அங்கீகரித்துள்ளார் அல்லது அல்லாஹ் அனுமதி கொடுத்ததால் தான் அவர்கள் குறைஷிகளை வழிமறித்து அவர்களின் செல்வங்களை எடுத்துக்கொண்டார்கள். இறைவன் சொன்னதை செய்வது தவறா?*

*ஆ) சிலுவைப்போர்களினால் எவ்வளவு பெரிய அழிவை முஸ்லிம்கள் சந்தித்தார்கள், முஸ்லிம்களோடு போர் செய்து, அவர்களை நாட்டைவிட்டு துரத்தினார்கள், கொலை செய்தார்கள். முஸ்லிம்களின் செயல்களோடு ஒப்பிடும் பொது, சிலுவைப்போர்கள் அதிக கொடூரமானவைகள்.*

*இ) அமைதியாக இருந்த இஸ்லாமிய நாடுகளை தாக்கி, முஸ்லிம்களை கோபமூட்டியது சிலுவைப் போர் புரிந்த கிறிஸ்தவர்கள் அல்லவா? (தேன் கூட்டில் கல்லெறிந்து, தேனீக்களை கோபமூட்டியது யார்? கிறிஸ்தவர்கள் அல்லவா?) சிலுவைப்போர் பற்றி நீங்கள் பதில் சொல்லியே ஆகவேண்டும். அதன் பிறகு தான் நான் இஸ்லாம் பற்றிய கேள்விகளுக்கு பதில் அளிப்பேன்.*

*தம்பி, நீ தான் 'இஸ்லாமிய போர்கள்' என்ற தலைப்பை தெரிவு செய்து, இதைப்பற்றி இந்த ரமளான் மாதம் நாம் பேசுவோம் என்று கூறினாய். நான் கேள்விகள் கேட்ட போது, இப்போது திடீரென்று 'சிலுவைப்போர்கள்' என்ற தலைப்பு பற்றி சொல்லுங்கள் என்று கேட்கிறாய். இஸ்லாமிய வன்முறைகளை சிலுவைப்போர்களோடு ஒப்பிட்டு பேசுகிறாய். மேலும் ஒட்டு மொத்த குற்றச்சாட்டை சிலுவைப்போர்கள் புரிந்தவர்கள் மீதே நீ சுமத்துகிறாய்.*

*முஸ்லிம்களுக்கு ஒன்றுமே தெரியாதது போலவும், கிறிஸ்தவர்கள் வலியச் சென்று போர் புரிந்தது போலவும் பேசுகிறாய். உன் வேண்டுதலுக்கு இணங்க, "**சிலுவைப்போர்கள் ஏன் துவங்கப்பட்டது**" என்ற தலைப்பில் ஒரு சிறு குறிப்பை இப்போது கொடுக்கிறேன். குற்றத்தை செய்தவனை விட, அதைச் செய்ய தூண்டுபவன் தான் அதிக தண்டனைக்கு உட்படுவான் என்று சொல்வது போல, சிலுவைப்போர் தவறு தான் ஆனால், அதை தொடங்க காரணமான இஸ்லாமியர்கள் மீது தான் அதிக குற்றம் சுமரும். இஸ்லாமியர்கள் தான் சிலுவைப்போருக்கு பிரதான காரணம் என்றுச் சொன்னால், தம்பி உனக்கு ஆச்சரியமாக இருக்கும். நிதானமாக நான் எழுதும் விவரங்களை படி மற்றும் அவைகளைப் பற்றி ஆய்வு செய்து நீயே சத்தியத்தை அறிந்துக்கொள்.*

***1) சிலுவைப்போர் மனிதச் செயலா? அல்லது இறைவன் கட்டளையிட்டதா?***

*சிலுவைப்போர்கள் மனிதன் எடுத்த முடிவுகளாகும். பைபிளின் படி திருச்சபை ஒருபோதும் போர்களை துவக்கக்கூடாது. திருச்சபையும் அரசாங்கமும் வெற்வேறானவைகளாகும். இவ்விரண்டையும் ஒன்று படுத்தும் போது, சிலுவைப்போர்கள் போன்ற விளைவுகள் உண்டாகும். தம்பி, ஒரு முக்கியமான விஷயம் என்னவென்றால், சிலுவை போர்கள் மூலமாக கூட சில நன்மைகள் உலகிற்கு உண்டாகியுள்ளது, அவைகளை கடைசியாக விவரித்துள்ளேன், தவறாமல் படித்துக்கொள்.*

*எப்படி சிலுவைப்போர்கள் மனிதனிடமிருந்து வந்ததோ அதே போல, முஹம்மது செய்த அனைத்து காரியங்களும் போர்களும், மனிதனிடமிருந்து வந்தது தான். இஸ்லாமிய போர்களுக்கு முஹம்மது "இறைவனின் சாயம் பூசினார்". தனக்கு இறைவன் அறிவித்ததாக கூறினார், ஆனால் அவர் தான் எல்லாவற்றுக்கும் மூலம்.*

***2) சிலுவைப்போர்கள் துவக்கப்பட காரணமாக இருந்தவர்கள் முஸ்லிம்கள் தான். முஹம்மதுவின் கடைசி காலம் முதல், கி.பி. 1095ம் ஆண்டு வரையுள்ள பட்டியல்***

*சிலுவைப்போர்கள் என்றுச் சொன்னாலே, முஸ்லிம்கள் கோபம் கொள்வார்கள். கிறிஸ்தவர்கள் செய்தது தவறு என்பார்கள். முஹம்மது மரித்த பிறகு, முஸ்லிம்கள் உலகம் அனைத்திற்கும் சென்று அமைதியான முறையில் இஸ்லாமை பரப்பியது போல நினைத்து இன்றுள்ள முஸ்லிம்கள் பேசுகிறார்கள். ஆனால், உண்மையில் அவர்கள் புரிந்த போர்கள், செய்த கொலைகள், சிந்திய இரத்தம், அழித்த தேவாலயங்கள் போன்றவற்றிற்கு அளவே இல்லை. சரி, ஒரு முறை சரித்திரத்தை திரும்பிப் பார்ப்போமா? கத்தோலிக்க போப் முதன் முதலாக சிலுவைப்போர் பற்றி அறிவிப்பு கொடுப்பதற்கு முன்பு என்ன நடந்தது?*

*முஹம்மது தமது கடைசி காலங்களில் தொடர்ந்த போர்களின் பட்டியலை படிப்போம். அதன் பிறகு ஏன் சிலுவைப்போர்கள் துவக்கப்பட்டன என்ற கேள்விக்கு பதில் கிடைத்துவிடும். முதல் மூன்று விவரங்களுக்கு மட்டுமே கி.பி. என்று எழுதுகிறேன், மீதமுள்ள ஆண்டுகளில் அவைகளை எழுதவில்லை. சிகப்பு வண்ணத்தில் கொடுக்கப்பட்ட விவரங்களை சிறிது அதிக கவனம் செலுத்தி படி தம்பி, அவைகள் மிகவும் முக்கியமானவைகள்.*

***கி.பி. 630ம் ஆண்டு** (முஹம்மது மரிப்பதற்கு இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு) முஹம்மது தன் இஸ்லாமிய குருசேடர்களுடன் தபூக் என்ற இடத்திற்கு போருக்குச் சென்றார். அவர் 30,000 ஜிஹாதிகளுடன் பைஜாண்டைன் கிறிஸ்தவர்களோடு சண்டையிட தபூக் என்ற இடம்வரைக்கும் சென்றார். தன்னுடன் போர் புரிய பைஜாண்டைன் அரசன் இராணுவத்துடன் வருகிறார் என்ற வதந்தியை முஹம்மது நம்பி இப்படி மிகபெரிய இராணுவத்துடன் சென்றார். பைஜாண்டைன் இவரோடு சண்டையிட வரவே இல்லை. இதனால், முஹம்மது திரும்பிச் சென்றுவிட்டார்.*

***கி.பி. 632 – 634:** அபூ பக்கர் அவர்கள் கலிஃபாவாக இருந்தார். இவர் தன்னுடைய முஸ்லிம் குருசேடர்களின் உதவியுடன், அரேபியா பகுதியில் இருந்த அனேக சிற்றரசர்களிடம் போரிட்டு, அவர்களை மறுபடியும் இஸ்லாமிய ஆட்சிக்குள் கொண்டுவந்தார். முஹம்மது மரித்தவுடன், அனேகர் இஸ்லாமை விட்டு வெளியே சென்றனர், ஜிஸ்யா வரி கட்ட மறுத்தனர். அபூபக்கர் போர் புரிந்து மறுபடியும் எல்லோரையும் இஸ்லாமிய ஆட்சியின் கீழ் கொண்டுவந்தார்.*

***கி.பி. 633:** காலித் அல்வாலித் என்பவரின் தலைமையில் முஸ்லிம் குருசேடர்கள் உல்லேஸ் என்ற பட்டணத்த பிடித்தார்கள். முஹம்மது காலித் அல்வாலித்தை "அல்லாஹ்வின் வாள்" என்று அழைப்பதுண்டு (தபரி 8:158/1616-17). இந்த காலித் அல்வாலித் ஒரு கால்வாயில் அனேகரை கொன்று அவர்களின் இரத்தத்தை சிந்தினார், அந்த கால்வாயில் இரத்தம் ஓடியது, அதனை இரத்தக் கால்வாய் என்று அழைத்தனர் (Blood Canal) (தபரி 11:24 / 2034-35)*

***634:** முஸ்லிம் குருசேடர்கள் யார்முக் யுத்தத்தில் பைஜாண்டைனை கைப்பற்றினார்கள்.*

***634-644** உமர் இப்னு அல் கத்தாப், கலிஃபாவாக இருந்தார், இவர் மிகவும் கொடூரமானவராக கருதப்படுகிறார்.*

*__635__ இஸ்லாமிய குருசேடர்கள் தமாஸ்கஸ் நாட்டை ஆக்கிரமித்தார்கள்.*

*__636__ முஸ்லிம் குருசேடர்கள் பைஜாண்டைன்ஸை ஆக்கிரமித்தார்கள் (யர்முக் யுத்தம்)*

*__637__ முஸ்லிம் குருசேடர்கள் ஈராக்கை ஆக்கிரமித்தார்கள் (அல் கதிஸிய்யா யுத்தம், 635 அல்லது 636)*

***638 முஸ்லிம் குருசேடர்கள் எருசலேமை முற்றுகையிட்டு, பைஜாண்டைன்ஸிடமிருந்து எருசலேமை ஆக்கிரமித்தார்கள். (638 Muslim Crusaders conquer and annex Jerusalem, taking it from the Byzantines.)***

*__638-650__ முஸ்லிம் குருசேடர்கள் ஈரானை ஆக்கிரமித்தார்கள் (காஸ்பியன் கடலோர பகுதிகளைத் தவிர)*

*__639-642__ முஸ்லிம் குருசேடர்கள் எகிப்தை ஆக்கிரமித்தார்கள்.*

*__641__ முஸ்லிம் குருசேடர்கள் சிரியா மற்றும் பாலஸ்தீனாவை தங்கள் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவந்தார்கள்.*

*__643-707__ முஸ்லிம் குருசேடர்கள் வட ஆஃப்ரிக்காவை ஆக்கிரமித்தார்கள்.*

*__644__ கலிஃப் உமர் அவர்கள் பெர்சிய அடிமையினால் கொல்லப்பட்டார். உஸ்மான் மூன்றாவது கலிஃபாவாக நியமிக்கப்பட்டார். உமரை விட உஸ்மான் கொஞ்சம் நல்லவர் என்று கருதப்படுகிறார்.*

*__644-650__ முஸ்லிம் குருசேடர்கள் சைப்ரஸ் நாட்டையும், வட ஆஃப்ரிக்காவில் உள்ள ட்ரிபோலி நாட்டையும், பிடித்தார்கள். மேலும், ஈரான், ஆப்கானிஸ்தான், மற்றும் சிந்துவில் இஸ்லாமிய ஆட்சியை அமைத்தார்கள்.*

*__656__ கலிஃபா உஸ்மான் அவர்கள் ஒரு இஸ்லாமிய இராணுவரால் கொல்லப்பட்டார். அடுத்த கலிஃபாவாக அலி அவர்கள் நியமிக்கப்பட்டார்கள். இவர் முஹம்மதுவின் மருமகன் ஆவார்.*

*__656__ "ஒட்டகப்போர்" என்ற போரில் முஹம்மதுவின் மனைவி ஆயிஷா அவர்கள், அலியுடன் போரிட்டார்கள். இதில் அலி அவர்கள் வெற்றிப் பெற்றார்கள்.*

*__657__ எருசலேமின் கவர்னருக்கும், அலிக்கும் இடையே "சிப்பின் யுத்தம்" என்ற போர் நடந்தது.*

*__661__ அலி அவர்கள் கொலை செய்யப்பட்டார்கள். அலியின் ஆதரவாளர்கள் அலியின் மகனாகிய ஹுசேன் அடுத்த கலிஃபாவாக வரவேண்டும் என்று விரும்பினர். ஆனால், அவர் முஅவிய்யாஹ் 1 என்பவரோடு ஒரு உடன்படிக்கை செய்தார்.*

*__661-680__ முஅவிய்யாஹ் அடுத்த கலிஃபா ஆனார். இவர் உமய்யித் ராஜவம்சத்தை ஸ்தாபித்தார் மேலும் தலைநகரை மதினாவிலிருந்து தமாஸ்கஸ்ஸுக்கு மாற்றினார்.*

***673-678 அரபியர்கள் பைஜாண்டன் சாம்ராஜ்ஜியத்தின் தலைநகர் கான்ஸ்டானொபிலை பிடித்தார்கள் (Arabs besiege Constantinople, capital of Byzantine Empire)***

*__680__ முஹம்மதுவின் பேரன் ஹுசேனும், அவரது குடும்பம், மற்றும் ஆதாரவாளர்கள் ஈராக்கின் கர்பலா என்ற இடத்தில் கொல்லப்பட்டனர்.*

***691 எருசலேமின் பெரிய கோபுரம் அமைக்கப்பட்டு முடிவுபெற்றது. முஹம்மதுவின் மறைவிற்கு பிறகு 60 ஆண்டுகளில் இது நடந்தது. (Dome of the Rock is completed in Jerusalem, only six decades after Muhammad's death.)***

*__705__ அப்த் அல் மாலிக் உம்மாயித் சாம்ராஜ்ஜியத்தை மறுபடியும் புதுப்பித்தார்.*

*710-713* முஸ்லிம் குருசேடர்கள் இந்தஸ் பள்ளத்தாக்கை ஆக்கிரமித்தார்கள் *(lower Indus Valley).*

*711-713* முஸ்லிம் குருசேடர்கள் ஸ்பெயின் நாட்டை ஆக்கிரமித்தார்கள். அங்கு அந்தலுஸ் ஆட்சியை அமைத்தார்கள்.

*[முஸ்லிம்கள் ஸ்பெயின் நாட்டை விட்டு விரட்டப்பட்டு 700 ஆண்டுகள் ஆகியும், இந்த முஸ்லிம்கள் இன்னும் அதனை நினைத்து துக்கம் கொண்டாடிக்கொண்டு இருக்கிறார்கள். இதனை விளக்கும் கட்டுரை இதுவாகும். ஸ்பெயின் தங்களுடைய சொந்த நாடு என்று இவர்கள் நினைக்கிறார்கள். (This article recounts how Muslims today still grieve over their expulsion 700 years later. They seem to believe that the land belonged to them in the first place.)]*

*719* கொர்டொவா, ஸ்பெயின் அரபியர்களின் ஆளுகையின் கீழ் வந்தது. *(Cordova, Spain, becomes seat of Arab governorship).*

*732* பொய்டியர்ச் யுத்தத்தில் முஸ்லிம் குருசேடர்கள் தடுக்கப்பட்டார்கள். பிரான்ஸ் அரபிய விஸ்தரிப்பை தடுத்துவிட்டது.

*749* அப்பாஸித்கள் குஃபாவை பிடித்தார்கள், உம்மயித்களின் ஆட்சியை கவிழ்த்தார்கள்.

*756* உம்மயித் தனி அரசாட்சியாக அமைக்க கொர்டொவா, ஸ்பெயின் நாடுகளில் முயற்சிகள் எடுக்கப்பட்டது.

*762* பாக்தாத் ஸ்தாபிக்கப்பட்டது.

*785* கொர்டொவாவில் மிகப்பெரிய மசூதி அமைக்கப்பட்டது.

***789 மொரொக்கோவில் முஸ்லிம் குருசேடர்கள் (இத்ரிசித்கள்) உருவாகினார்கள். இஸ்லாமியராக இருந்து கிறிஸ்தவராகிய மாறிய கிற்ஸ்டொஃபொரஸ் என்பவர் தூக்கிலிடப்பட்டார். (Christoforos, a Muslim who converted to Christianity, is executed.)***

***800*** அக்லபித் ராஜ்ஜியம் துனிசியாவில் முஸ்லிம் குருசேடர்களால் உருவானது.

***807 கலிஃப் ஹாருன் அல் ரஷீத் என்பவர், எருசலேமில் உள்ள இஸ்லாமியரல்லாத ஜெப வீடுகள், மற்றும் சர்ச் ஆஃப் மக்தலேனா மரியாள் திருச்சபையை அழிக்கும் படி கட்டளையிட்டார். (Caliph Harun al-Rashid orders the destruction of non-Muslim prayer houses and of the Church of Mary Magdalene in Jerusalem.)***

***809*** அக்லபித் முஸ்லிம் குருசேடர்கள் சர்தினியா, இத்தாலியை ஆக்கிரமித்தார்கள்.

***813 பாலஸ்தீனாவில் உள்ள கிறிஸ்தவர்கள் தாக்கப்பட்டார்கள், அனேகர் நாட்டை விட்டு ஓடிப்போனார்கள்.***

***831*** முஸ்லிம் குருசேடர்கள் இத்தாலின் பாலேமோவை கைப்பற்றினார்கள், இத்தாலியின் தென் பகுதியை கொள்ளையிட்டார்கள்.

***850 கலிஃப் அல் மடவக்கில் இஸ்லாமியரல்லாத ஜெப வீடுகளை அழிக்கும் படி கட்டளையிட்டார்.***

***855*** சிரியாவில் (ஹிம்ஸ்) கிறிஸ்தவர்கள் மத்தியிலே ஒரு கிளர்ச்சி எழும்பியது.

***837-901*** அக்லபித்ஸ் இஸ்லாமிய குருசேடர்கள் சிசிலியை கைப்பற்றினார்கள், கொர்சிகா, இத்தாலி, பிரான்ஸ் நாடுகளை கொள்ளையிட்டார்கள் *(Aghlabids (Muslim Crusaders) conquer Sicily, raid Corsica, Italy, France.)*

***869-883*** *ஈராக்கில் கருப்பு இன அடிமைகள் மத்தியிலே ஒரு கிளர்ச்சி எழும்பியது. (Revolt of black slaves in Iraq)*

***909*** *துனிசியாவில் ஃபதிமத் என்ற இஸ்லாமிய குருசேடர்கள் எழும்பினார்கள். இவர்கள் சிசிலி, சர்டினியாவை கைப்பற்றினார்கள்.*

***928-969*** *பைஜாண்டையில் இராணுவ எழுச்சி உண்டானது, அவர்கள் தங்களின் பழைய பகுதிகளை பிடித்துக்கொண்டார்கள். (Byzantine military revival, they retake old territories, such as Cyprus (964) and Tarsus (969).)*

***937 ஒரு கொடூரமான இஸ்லாமிய தலைவர், ரோமனஸ் கவர்னருக்கு கடிதம் எழுதினார். புனித ஸ்தலங்கள் தன்னுடைய கட்டுப்பாட்டிற்குள் உள்ளது என்று பெருமையடித்துக் கொண்டார். (The Ikhshid, a particularly harsh Muslim ruler, writes to Emperor Romanus, boasting of his control over the holy places.)***

***937 உயிர்தெழுதலின் சபை என்ற பெயர் கொண்ட சபை முஸ்லிம்களால் தீயிக்கு இறையாக்கப்பட்டது. எருசலேமின் அனேக திருச்சபைகள் தாக்கப்பட்டன. (The Church of the Resurrection (known as Church of Holy Sepulcher in Latin West) is burned down by Muslims; more churches in Jerusalem are attacked.)***

***960*** *கராகனித் துருக்கிகள் இஸ்லாமுக்கு மாற்றப்பட்டார்கள்.*

***966 எருசலேமின் கிறிஸ்தவர்களுக்கு எதிராக கலகங்கள் எழும்பின. (Anti-Christian riots in Jerusalem)***

***969*** *ஃபதிமித் இஸ்லாமிய குருசேடர்கள் எகிப்தை கைப்பற்றினார்கள், கெய்ரோவை ஸ்தாபித்தார்கள்.*

*970 செல்ஜுக்ஸ் என்பவர்கள் கிழக்கு பகுதியிலிருந்து இஸ்லாமிய பகுதிகளில் நுழைந்தார்கள்.*

*973 சிரியாவும், இஸ்ரவேலும் ஃபதிமித்களால் ஆக்கிரமிக்கப்பட்டது.*

***1003 அல் ஹகீம் முதலாவதாக கொடுமைப்படுத்த ஆரம்பித்தார். எகிப்தில் உள்ள பரிசுத்த மாற்கு திருச்சபை அழிக்கப்பட்டது.***

***1009 அல் ஹகீம் என்பவரால் உயிர்த்தெழுதல் சபை அழிக்கப்பட்டது. (Destruction of the Church of the Resurrection by al-Hakim (see 937))***

***1012 அல் ஹகீம் யூதர்களையும் கிறிஸ்தவர்களையும் கொடுமைப்படுத்த கட்டளைகளை கொடுத்தார்.(Beginning of al-Hakim's oppressive decrees against Jews and Christians)***

*1015 பாலஸ்தீனாவில் பூமியதிர்ச்சி உண்டானது. இஸ்லாமியர்கள் கட்டிய டூம் ஆஃப் ராக், விழுந்தது. (Earthquake in Palestine; the dome of the Dome of the Rock collapses.)*

*1031 உம்மாயித் கலிஃபா ராஜ்ஜியம் உடைந்துவிட்டது, 15 தனித் தனி இராஜ்ஜியங்களாக் பிரிந்தது.*

***1048 உயிர்த்தெழுதலின் திருச்சபை மறுபடியும் கட்டப்பட்டு முழுமைப்பெற்றது (Reconstruction of the Church of the Resurrection completed)***

*1050 அல்மொரவித் (முஸ்லிம் குருசேடர்கள்) இயக்கம் மௌரேடானியாவில் உருவாகியது. இஸ்லாமியர்கள் குர்-ஆன், ஹதீஸ் மற்றும் மாலிகி சட்டத்தில் அதிக கவனம் செலுத்தினார்கள் (Creation of Almoravid (Muslim Crusaders) movement in Mauretania; Almoravids (also known as Murabitun) are coalition of western Saharan Berbers; followers of Islam, focusing on the Quran, the hadith, and Maliki law.)*

***1055 செல்ஜுக் இளவரசர் தக்ரூல் பாக்தாதை பிடித்தார், தன் இராஜ்ஜியத்தில் பாக்தாத்தை இணைத்துக்கொண்டார்.***

***1055 உயிர்த்தெழுதலின் சபை என்ற திருச்சபையின் சொத்துக்கள் பிடுங்கப்பட்டது (Confiscation of property of Church of the Resurrection)***

*1071 மஞ்சிகெர்ட் யுத்தம், செல்ஜுக் துருக்கிகள்(முஸ்லிம் குருசேடர்கள்) பைஜாண்டனை தோற்கடித்து, அனடோலியாவில் அதிகமான இடங்களை கைப்பற்றிக்கொண்டனர்.*

*1071 துருக்கிகள் (முஸ்லிம் குருசேடர்கள்) பாலஸ்தீனாவை ஆக்கிரமித்தார்கள்.*

*1075 செல்ஜுக் முஸ்லிம் குருசேடர்கள் நைசியாவை ஆக்கிரமித்து, அனடோலியாவிற்கு தலைநகரமாக்கினார்கள்.*

*1076 அல்மொரவித்கள் (முஸ்லிம் குருசேடர்கள்) கானா மேற்கு பகுதியை ஆக்கிரமித்தார்கள் (Almoravids (Muslim Crusaders) (see 1050) conquer western Ghana.)*

***1085 டொலெடோ கிறிஸ்தவ இராணுவத்தினரால் கைப்பற்றப்பட்டது. (Toledo is taken back by Christian armies.)***

*1086 அல்மொரவித்கள் (முஸ்லிம் குருசேடர்கள்) அந்தலுஸ் என்பவருக்கு உதவி புரிந்தார்கள் (Almoravids (Muslim Crusaders) (see 1050) send help to Andalus, Battle of Zallaca.)*

*1090-1091 அல்மொரவித்கள் (முஸ்லிம் குருசேடர்கள்) அந்தலுஸ் அனைத்தையும் ஆக்கிரமித்துக்கொண்டார்கள். (சரகோசா மற்றும் சில தீவுகளைத் தவிர)*

*1094 பைஜாண்டைன்ஸின் ஆளுநர், அலேக்சியஸ் காம்னெனஸ் 1, மேற்கில் உள்ள கிறிஸ்தவர்களிடம் உதவி கேட்டார். தன்னுடைய இராஜ்ஜியத்தை செல்ஜுக் முஸ்லிம்களால் ஆக்கிரமிக்கப்பட்டு இருந்தது. இந்த செல்ஜுக்ஸ் என்பவர்கள் துருக்கி முஸ்லிம்களாக இருந்தார்கள் (பார்க்க 970).*

*Byzantine Emperor Alexius Comnenus I asks western Christendom for help against Seljuk invasions of his territory; Seljuks are Muslim Turkish family of eastern origins; see 970.*

***1095 போப் அர்பன் 2, சிலுவைப்போர் பற்றி முதல் பிரசங்கம் செய்தார், மற்றும் இவர்கள் 1099ம் ஆண்டு எருசலேமை கைப்பற்றினார்கள்.(1095 Pope Urban II preaches first Crusade; they capture Jerusalem in 1099)***

*ஆக, இஸ்லாமியர்களின் அனேக ஆக்கிரமிப்பிற்கு கொடுமைகளுக்கு பிறகு தான் மேற்கத்திய கிறிஸ்தவர்கள் முதல் சிலுவைப்போரை துவக்கினார்கள்.*

***3) மக்காவில் உள்ளை அனைத்து மசூதிகளையும் தரைமட்டமாக்கியவர்களுக்கு என்ன தண்டனை கொடுப்பீர்கள்?***

*தம்பி, இஸ்லாமியர்கள் எருசலேமின் ஜெப ஆலயங்களை தரைமட்டமாக்கினார்கள், இன்னும் அனேக இடங்களில் இருந்த இஸ்லாமியரல்லாத வணக்கஸ்தலங்களை அழித்தார்கள். இதனால் போப்பின் அறிக்கையின் பேரில் ஒரு பாடத்தை இஸ்லாமியர்களுக்கு கற்றுக் கொடுத்தார்கள்.*

*சிலுவைப்போர்களை பைபிளும், கிறிஸ்தவர்களும் ஆதரிக்கவில்லை. மத தலைவர்கள் அல்லாமல், அரசு இஸ்லாமியர்களுக்கு பாடம் கற்றுக்கொடுத்து இருந்திருக்க வேண்டும். ஆனால், துரதிஷ்டவசமாக, ஒரு மத தலைவர் இந்த வேலையை முன்னின்று செய்ததால், கிறிஸ்துவிற்கும், பைபிளுக்கும் கெட்டப்பேர் வந்தது. ஆனால், சிலுவைப்போரினால் நன்மையும் உண்டானது. அதாவது, இஸ்லாமியர்களின் வால் வெட்டப்பட்டது, கிறிஸ்தவர்கள் நிம்மதியாக வாழ ஆரம்பித்தார்கள். (சிலுவைப் போரினால் உலகிற்கு கிடைத்த நன்மைகளை/தீமைகளை தனியாக உனக்கு பிறகு எழுதுகிறேன் தம்பி)*

*தம்பி, இதுவரை சிலுவை போர்கள் ஏற்படுவதற்கு யார் காரணம் என்பதை விளக்கினேன். இஸ்லாமியர்களின் அத்துமீறல்களுக்கு ஒரு முடிவை சிலுவைப்போர்கள் கொடுத்தன.*

*முஸ்லிம்கள் அமைதி மார்க்கத்தார்களாக நடந்து இருந்திருந்தால், சிலுவைப்போர்கள் வந்திருக்காது. நாடுகளை பிடித்து, கிறிஸ்தவ ஆலயங்களை அழித்தபடியினால், மிகப்பெரிய தோல்வியை இஸ்லாம் கண்டது.*

*தம்பி, மக்காவில் உள்ள அனைத்து மசூதிகளையும் ஒரு பிரிவினர் அழித்தால், அவைகளை தீயிட்டு கொளுத்தி சாம்பலாக்கிவிட்டால், முஸ்லிம்கள் என்ன செய்வார்கள்? அதைத் தான் அன்று கத்தோலிக்க கிறிஸ்தவர்கள் போப்பின் தலைமையில் அல்லது அறிவுரையில் செய்தார்கள். கண்ணுக்கு கண், பல்லுக்கு பல் என்ற கட்டளைகளை நீங்கள் மட்டும் பயன்படுத்தவேண்டும் என்பதில்லை, மற்றவர்களும் அதை உங்களுக்கு எதிராக பயன்படுத்தினால் என்ன விளையும் என்பது தான் சிலுவைப்போரினால் கிடைக்கும் பாடம்.*

*தம்பி, ஒரு சிறுகுறிப்பு மட்டும் எழுதினேன், இன்னும் விவரமாக உனக்கு சிலுவைப்போரின் காரணத்தை அறிய விரும்பினால், எனக்கு தெரிவி, இன்னும் தெளிவாக விளக்குகிறேன்.*

*தம்பி கீழ்கண்ட ஆங்கில கட்டுரைகளை நீ படிக்கவேண்டும் என்று நான் உன்னை கேட்டுக்கொள்கிறேன். இவைகள் மிகவும் அருமையான கட்டுரைகள். சிலுவைப்போர்கள் பற்றி குற்றச்சாட்டை முன்வைக்கும் இஸ்லாமியர்கள், உண்மைகளை அறியவேண்டும் என்ற எண்ணமுடையவர்களாக இருந்தால் இவைகளை படிக்கலாம்.*

1. ***THE CRUSADES IN CONTEXT*** *By Dr. Paul Stenhouse © 2007 Chevalier Press. Used by permission.*
2. ***THE CRUSADES AND THE SPIN DOCTORS*** *By Dr. Paul Stenhouse © 2007 Chevalier Press. Used by permission.*
3. ***CRUEL EXCESS & REGRET - THE "PEOPLE'S CRUSADE"*** *By Dr. Paul Stenhouse © 2007 Chevalier Press. Used by permission.*
4. ***What was and what might have been - THE "GOLDEN AGE" OF HARUN AL-RASHID*** *By Dr. Paul Stenhouse © 2008 Chevalier Press. Used by permission.*
5. ***Islamic Crusades vs. Christian Crusades - Who should own the "Kingdom of Heaven"?***
6. ***Timeline of the Islamic Crusades - The Truth about Islamic Imperialism*** *(நான் மேலே கொடுத்த விவரங்களை இந்த கட்டுரையிலிருந்து எடுத்தேன்)*
7. ***Christian statement on the Crusades***
8. ***From Jihad to the Crusades***

*உன்னை அடுத்த கடித்தத்தில் சந்திக்கிறேன்.*

*இப்படிக்கு, உன் அண்ணன், உமர்.*

***மூலம்***

***உமரின் ரமளான் மாத கட்டுரைகள்***

---

**நாள் 6 - ஆறு முறை தோல்வியுற்ற அல்லாஹ்விற்கு ஏழாவது முறை வெற்றியை கொடுத்த சஹாபாக்கள்**

*முந்தைய ஐந்து தொடர் கட்டுரைகளை கீழேயுள்ள தொடுப்புகளை சொடுக்கி படிக்கலாம்:*

- *2013 ரமளான் நாள் 1 -* ***அன்புள்ள அண்ணாவிற்கு . . . போர் புரிவது அமைதியை நிலைநாட்டுவதற்கு அல்லவா?***
- *2013 ரமளான் நாள் 2 -* ***முஹம்மதுவும் வழிப்பறி கொள்ளைகளும்***
- *2013 ரமளான் நாள் 3 -* ***தேன் கூட்டில் கல்லெறிந்து தேனீக்களை கோபமூட்டியது யார்? முஹம்மதுவா? மக்காவினரா?***

* *2013 ரமளான் நாள் 4 -* [***பதிலுக்கு பதில்: நீங்கள் செல்வங்களை எடுத்துக்கொண்டீர்கள், நாங்கள் கொள்ளையடிக்கிறோம்***]
* *2013 ரமளான் நாள் 5 -* [***முஸ்லிம் குருசேடர்களும் கிறிஸ்தவ குருசேடர்களும் (ஜிஹாதும் சிலுவைப்போர்களும்)***]

*ஆறாவது தொடர் கட்டுரையை இப்போது படிப்போம்.*

---

***அன்புள்ள தம்பிக்கு,***

*ஒவ்வொரு நாளும் கடிதம் எழுதும் நீ, ஏன் நேற்று எழுதவில்லை? அலுவலகத்தில் வேலை அதிகமாக உள்ளதா? அல்லது எனக்கு எழுதக்கூடாது என்று எண்ணிவிட்டாயா?*

*நீ விரும்பியபடியே, இந்த கடிதத்தில் முஹம்மது புரிந்த இதர வழிப்பறி கொள்ளைகள் பற்றிய கேள்விகளை உன்னிடம் கேட்கிறேன்.*

***முதல் மூன்று வழிப்பறி கொள்ளைகள்:***

*முஹம்மது மதினாவிற்குச் சென்றுவிட்ட பிறகு அவர் தம்முடைய சஹாபாக்களை குறைஷிகளின் வியாபாரிகளை கொள்ளையிட அனுப்பினார். முதல் மூன்று வழிப்பறி கொள்ளைகளைப் பற்றி முந்தைய கடிதத்தில் எழுதினேன். இப்போது இன்னும் நான்கு வழிப்பறி கொள்ளைகள் பற்றி மிக சுருக்கமாக காண்போம். இந்த வழிப்பறி கொள்ளைகள் "முஹம்மது ஒரு உண்மையான நபி அல்ல" என்பதை நிருபிக்கின்றன, மேலும் இஸ்லாமியர்களை தர்மசங்கட சூழ்நிலையில் தள்ளுகின்றன.*

***அடுத்த நான்கு வழிப்பறி கொள்ளைகள் (மூலம்: ரஹீக் மற்றும் இதர சரித்திர புத்தகங்கள்)***

***நான்காவது வழிப்பறி கொள்ளை – 'அப்வா' (அ) 'வத்தான்'***

*ஹிஜ்ரி 2ல் ஸஃபர் (கி.பி. 623 ஆகஸ்டு) மாதம் நபி (ஸல்) அவர்கள் 70 முஹாஜிர்களுடன் குறைஷிகளின் வியாபாரக் கூட்டத்தை இடை மறிப்பதற்காக "அல்அப்வா" அல்லது "வத்தான்" என்ற இடத்தை நோக்கிச் சென்றார்கள். ஆனால், சண்டை ஏதும் நடைபெறவில்லை. . . . இந்த போரின் போது "ழம்ரா" கிளையினரின் தலைவரான அம்ர் இப்னு மக்ஷி என்பவருடன் நட்பு உடன்படிக்கை செய்தார்கள்.*

*[இந்த வழப்பறியில், குறைஷிகளை இவர்கள் சந்திக்கமுடியவில்லை, ஆனால், "ழம்ரா" இனத்தவரை கொள்ளையடித்தார்கள், அதன் பிறகு அவர்களோடு உடன்படிக்கை செய்துக்கொண்டார்கள், ரஹீக் புத்தகத்தில் இவர்களை கொள்ளையிட்டது பற்றி அதன் ஆசிரியர் எழுதவில்லை]*

***ஐந்தாவது வழிப்பறி கொள்ளை – 'பூவாத்'***

*ஹிஜ்ரி 2, ரபீவுல் அவ்வல் (கி.பி. 623 செப்டம்பர்) மாதம் நபி (ஸல்) தங்களது 200 தோழர்களுடன் குறைஷிகளின் வியாபாரக் கூட்டத்தை வழிமறிப்பதற்காகச் சென்றார்கள். இந்த வியாபாரக் கூட்டத்தில் உமய்யா இப்னு கலஃபும் நூறு குறைஷிகளும் இருந்தனர். இவர்களுடன் 2500 ஒட்டகங்கள் இருந்தன. நபி (ஸல்) அவர்கள் "ரழ்வா" என்ற மலைக்கருகில் உள்ள "பூவாத்" என்ற இடம் வரை சென்றார்கள். ஆனால், வியாபாரக்*

*கூட்டம் அந்த இடத்தை முன்கூட்டியே கடந்து விட்டதால் சண்டை ஏதும் நடைபெறவில்லை.*

***ஆறாவது வழிப்பறி கொள்ளை – 'துல் உஷைரா':***

*ஹிஜ்ரி 2ல் ஜுமாதா அல்ஊலா அல்லது ஜுமாதா அல் ஆகிரா (கி.பி. 623 நவம்பர் அல்லது டிசம்பர்) மாதம் நபி (ஸல்) அவர்கள் தமது 150 அல்லது 200 முஹாஜிர் தோழர்களுடன் இந்தப் போருக்காக புறப்பட்டர்கள். இப்போரில் கலந்து கொள்ளும்படி எவரையும் நிர்பந்திக்கவில்லை. இந்த 150 (அல்லது) 200 தோழர்களும் 30 ஒட்டகங்களில் ஒருவர் மாறி ஒருவராக பயணித்தனர். மக்காவிலிருந்து வியாபாரச் சாமான்களுடன் ஷாம் நோக்கி சென்று கொண்டிருந்த குறைஷிகளின் வியாபாரக் கூட்டத்தினரை வழிமறிப்பதே நபி (ஸல்) அவர்களின் நோக்கமாக இருந்தது. ஆனால், நபி (ஸல்) அவர்கள் "துல் உஷைரா" என்ற இடத்தை அடைவதற்குப் பல நாட்களுக்கு முன்னதாகவே அக்கூட்டம் அந்த இடத்தைக் கடந்து விட்டது தெரியவந்தது.*

*அன்பான தம்பி, மேற்கண்ட மூன்று வழிப்பறி கொள்ளைகளிலும் முஹம்மதுவிற்கு எதுவும் கிடைக்கவில்லை. மொத்தம் ஆறு வழிப்பறி கொள்ளைகளை முஹம்மது மேற்கொண்டாலும், அவர் குறைஷிகளை பிடிக்கமுடியவில்லை, அவர்கள் வேறு வழியாகவோ அல்லது இவர்களுக்கு முன்பாகவோ கடந்துச் சென்றுவிட்டார்கள். இந்த மேற்கண்ட ஆறு வழிப்பறி கொள்ளைகள் முஹம்மதுவின் நபித்துவம் பற்றிய அனேக சந்தேகங்களை எழுப்புகிறது. அவைகளை கீழ்கண்ட ஏழாவது வழிப்பறி கொள்ளைப் பற்றி நாம் தெரிந்துக்கொண்ட பின்பு பார்க்கலாம். முஹம்மது ஒரு உண்மையான தீர்க்கதரிசியா? அல்லது கள்ளத் தீர்க்கதரிசியா? என்பது இதன் மூலம் விளங்கும்.*

### *ஏழாவது வழிப்பறி கொள்ளை – "நக்லா'*

*இந்த ஏழாவது வழிப்பறி கொள்ளை வித்தியாசமானது. முஹம்மதுவின் வார்த்தைகளுக்கு கீழ்படியாமல் போனதே, வெற்றியின் இரகசியம் ஆகிவிட்டது. முஹம்மதுவிற்கு கீழ்படிவது அல்லாஹ்விற்கு கீழ்படிவதற்கு சமம் இல்லையா? இப்படியிருக்க முஹம்மதுவின் வார்த்தைகளை உதறித்தள்ளியதே, அல்லாஹ்வின் விருப்பத்தின் படி செய்வது போல ஆகிவிட்டது.*

***இந்த விவரம் பற்றி விவரமாக ரஹீக் புத்தகத்தின் 203ம் பக்கத்தில் படிக்கவும். நான் இங்கு சுருக்கமாக எழுதுகிறேன்.***

***அ) முஹம்மது 12 நபர்களை அனுப்பி,** குறைஷி வியாபாரிகளை வேவு பார்த்து வரும் படி அனுப்புகிறார்.*

***ஆ) அவர்களும் சென்று வேவு பார்க்கிறார்கள்**, இவர்கள் தலைச்சவரம் செய்துச் சென்றதாலும், அந்த மாதம் புனித மாதம் என்பதாலும் குறைஷி வியாபாரிகள் இவர்கள் மீது சந்தேகம் கொள்ளவில்லை. இவர்கள் மூலம் ஆபத்து வராது என்று நினைத்துவிட்டார்கள்.*

***இ) ஆனால், முஹம்மது அனுப்பிய நபர்களோ**, இந்த அருமையான சந்தர்ப்பத்தை நழுவவிடக்கூடாது என்ற எண்ணத்தில், அதாவது பொருட்களுடன் இருக்கும் குறைஷி வியாபாரிகளை விட்டுவிடக்கூடாது, அவர்களை தாக்கி கொள்ளையிடவேண்டும் என்று தங்களுக்குள் முடிவு செய்துக்கொண்டார்கள்.*

***ஈ) முஹம்மதுவின் வார்த்தைக்கு விரோதமாக செயல்பட்டு**, அவர்கள் குறைஷிகளை கொள்ளையிட்டு, கொலையும் செய்து பொருட்களை மதினா கொண்டுவந்துவிட்டார்கள். முஹம்மதுவிற்கும் ஐந்தில் ஒரு பாகத்தை கொடுத்தார்கள், ஆனால் முஹம்மது இந்த செயலை வெறுத்தார், அவர் கோபத்தில் இருந்தார். முஹம்மது தனக்கு கொடுத்த பொருட்கள் மற்றும் பிடிபட்ட கைதிகள் பற்றி மௌனம் சாதித்தார்.*

***உ) குறைஷிகள் முஹம்மது பற்றி தவறாக பேச ஆரம்பித்துவிட்டார்கள்**. புனித மாதத்திலும் இவர் வன்முறையில் ஈடுபடுகிறார், இவர் எப்படி நபியாக இருக்கமுடியும்? என்று கேள்வி கேட்க ஆரம்பித்துவிட்டார்கள். முஹம்மதுவின் வார்த்தைக்கு எதிராக செயல்பட்டதினால், சஹாபாக்கள் தர்ம சங்கடமான சூழ்நிலையில் மாட்டிக்கொண்டு துக்கமாக இருக்கிறார்கள்.*

***ஊ) இந்த சமயத்தில் அல்லாஹ் குர்ஆன் 2:217*** *வசனத்தை இறக்கி, "சஹாபாக்களின் செய்கைகளுக்கு ஆதரவாக" பேசினார். இதன் பிறகு முஹம்மது இயல்பு நிலைக்கு திரும்பினார், பொருட்களை பெற்றுக்கொண்டார். சஹாபாக்களும் நிம்மதியடைந்தார்கள்.*

*இது தான் நக்லா கொள்ளைப் பற்றிய விவரங்கள். மேற்கண்ட அனைத்து விவரங்கள் பற்றி ரஹீக் என்ற புத்தகத்தில் படிக்கலாம் (பக்கங்கள் 201, 202 & 203).*

*இப்போது மேற்கண்ட அனைத்து நிகழ்ச்சிகளும், எப்படி முஹம்மதுவின் நபித்துவத்தை சந்தேகத்திற்கு உட்படுத்துகிறது? என்பதைக் காண்போம்.*

***முஹம்மதுவின் வஹி பற்றி இஸ்லாமிய நம்பிக்கை:***

***1) இஸ்லாமியர்களின் படி*** *முஹம்மது ஒரு தீர்க்கதரிசி ஆவார்.*

***2) இவருக்கு இரண்டு*** *வகையான வஹிகளை (வெளிப்பாடுகளை) அல்லாஹ் கொடுத்தார்.*

***3) முதல் வகை வஹி -*** *ஜிப்ராயீல் தூதன் குர்-ஆனை முஹம்மதுவிற்கு ஓதிக் காண்பிப்பார், அதனை முஹம்மது மக்களுக்கு ஓதிக்காண்பிப்பார், அதுவே குர்-ஆன்.*

***4) இரண்டாவது வகையான வஹியை*** *யார் கொண்டு வந்தார்கள் என்று தெரியாது, ஆனால் அதனை முஹம்மது பெற்று, அதன் படி தான் மற்றவர்களுக்கு கட்டளைகளை கொடுத்தார், தானும் அந்த வஹியின் படியே வாழ்ந்து காட்டினார். அதாவது, முஹம்மதுவின் பேச்சும், செயல்களும் இரண்டாவது வஹியின் படியே இருந்தது. சண்டைக்குச் செல்லும் படி, முஹம்மது சஹாபாக்களுக்கு கட்டளை கொடுத்தால், இவருக்கு அல்லாஹ்விடமிருந்து இரண்டாவது வகையான வஹி ஏற்கனவே வந்துள்ளது என்று பொருள். இதனை அடிப்படையாகக் கொண்டு முஹம்மது சஹாபாக்களை போருக்கு செல்லும் படி, குறைஷிகளின் வியாபாரிகளை தாக்கி, அவர்களின் பொருட்களை அபகரிக்கும் படி கூறியுள்ளார்.*

***5) முஹம்மதுவின் சொல்லும் செயலும்*** *அல்லாஹ்வின் வஹியாகும். ஆகையால் தான் முஸ்லிம்கள் முஹம்மதுவை அப்படியே காபி அடித்து வாழவேண்டும் என்று உற்சாகப்படுத்தப்படுகிறார்கள். முஹம்மது தாடி விட்டால், முஸ்லிம்களும் தாடி விடுகிறார்கள். இஸ்லாமின்படி, இப்படி முஹம்மதுவை முழுவதுமாக பின்பற்ற முஸ்லிம்கள் முயற்சிப்பது மிகவும் நல்ல விஷயம் ஆகும்.*

*தம்பி, மேற்கண்டவைகள் இஸ்லாமிய நம்பிக்கைகளாகும், இதனை நீ மறுக்கமாட்டாய் என்று நம்புகிறேன். இவைகளை மனதில் வைத்துக்கொண்டு, நாம் இப்போது "நக்லா" என்ற வழிப்பறி கொள்ளை நிகழ்ச்சியை சுற்றியுள்ள விஷயங்களை ஆய்வு செய்வோம். தம்பி, இந்த விஷயங்கள் மிகவும் முக்கியமானவைகள், இவைகளை கூர்ந்து கவனி.*

***முதல் ஆறு வழிப்பறி கொள்ளைகள் தோல்வியை தழுவியது ஏன்?***

*அ) முதன் முதலாக குறைஷி வியாபாரிகளை கொள்ளையிட முஹம்மது ஆறுமுறை சஹாபாக்களை அனுப்பினார். ஆனால், ஒரு முறையும் அவரால் குறைஷி வியாபாரிகளை கொள்ளையிட முடியவில்லை. இவர்களின் கைக்கு பிடிபடாமல் குறைஷிகள் வேறு வழியாக சென்றுவிட்டார்கள், சில நேரங்களில் முஸ்லிம்கள் அந்த இடத்தை அடைவதற்கு முன்பே, அதை தாண்டி சென்றுவிட்டார்கள். முஸ்லிம்கள் வெறுங்கையோடு திரும்பி வந்தார்கள்.*

*ஆ) முஹம்மது ஒரு நபியானால், தனக்கு வந்த வஹியின்படிதான் அவர் அனைத்தையும் செய்தார் என்றுச் சொல்வது உண்மையானால், ஏன் இத்தனை முறை, முஹம்மதுவிற்கு வந்த வஹி தோல்வி அடைந்தது?*

*இ) இந்த ஆறுமுறை கொள்ளையிட முஹம்மது அனுப்பியது தன்னுடைய சொந்த சிந்தனை என்று இதன் மூலம் தெரிகின்றதல்லவா? இப்படி சண்டையிட முஹம்மது அனுப்பியது தன் சொந்த சிந்தனையிலிருந்து வந்த செயல் என்று கருதினால், இன்னும் எவைகளையெல்லாம் அவர் சொந்தமாக கூறியிருப்பார் எந்த சந்தேகம் எழுகின்றது. ஹதீஸ்களில் வரும் விவரங்களில் எத்தனை சதவிகிதம் வஹி? எத்தனை சதவிகிதம் சொந்தமாக இட்டுக்கட்டியது?*

*ஈ) "இல்லை.. இல்லவே இல்லை. முஹம்மது தனக்கு வந்த இரண்டாவது வகையான வஹியின் படி தான் அல்லாஹ்வின் காரியங்களைச் செய்வார்" என்று முஸ்லிம்கள் சொல்வார்களானால், ஏன் அந்த ஆறுமுறையும் தோல்வியை தழுவினார்கள்? இதனால் அல்லாஹ்வின் வஹியில் தவறு இருக்கிறது என்று நாம் எண்ணவேண்டி வருமே!*

*உ) அல்லாஹ் என்பவர் சர்வ ஞானி என்றால், குறைஷிகள் எந்த வழியில் செல்கிறார்கள்? எந்த காலத்தில் அந்த குறிப்பிட்ட இடத்தை அடைவார்கள் என்று அல்லாஹ் அறியாமல் போனதென்ன? அவர் ஏன் தன் நபிக்கு தவறான விஷயங்களை வஹியாக சொன்னார்? ஒரு முறை இரு முறை அல்ல, ஆறுமுறையும் இப்படியே நடந்தது.*

*இப்பொழுது நக்லா வழிப்பறி கொள்ளைப் பற்றி பார்ப்போம்.*

***அல்லாஹ்வின் வஹியை பெற்றவர்கள் யார்? முஹம்மதுவா? (அ) சஹாபாக்களா?***

*நம்முடைய கேள்விகள் என்னவென்றால்:*

*1) முஹம்மதுவிற்கு வஹி வந்து அதன்படி தான் அவர் சஹாபாக்களை நக்லாவிற்கு சண்டையிடக்கூடாது என்று சொல்லி அனுப்பினாரா? அல்லது சுமயாக சிந்தித்து, அல்லாஹ் கட்டளையிடாமலேயே அனுப்பினாரா?*

*2) வஹி வந்ததால் தான் முஹம்மது அனுப்பினார் என்றுச் சொன்னால்? சஹாபாக்கள் செய்தது முஹம்மதுவிற்கு / அல்லாஹ்விற்கு எதிரான செயல் அல்லவா?*

*3) சஹாபாக்களின் செய்கைகளை ஆதரித்து அல்லாஹ் வசனத்தை இறக்குகிறார், அப்படியானால் ஏன் அவர் முதலில் சண்டையிடக்கூடாது என்று முஹம்மதுவிற்கு சொல்லவேண்டும்? அதன் பிறகு, சண்டையிட்டு கொள்ளையிட்டதை ஆதரிக்கவேண்டும்? அல்லாஹ் முஹம்மதுவோடு விளையாடுகிறாரா?*

*4) நக்லா நிகழ்ச்சிப் பற்றி, முஹம்மதுவிற்கு எட்டாத ஞானம் கூட சஹாபாக்களுக்கு எட்டியது என்று நாம் சொல்லலாம் அல்லவா? அதாவது அல்லாஹ் சிந்தித்தது போலவே, சஹாபாக்கள் சிந்தித்து செயல்பட்டார்கள். ஆனால், அல்லாஹ் சிந்தித்தது போல முஹம்மது சிந்திக்கவில்லை.*

*5) முஹம்மது நபியா அல்லது சஹாபாக்கள் நபிகளா?*

*6) நிலைமை இன்னும் மோசமாக மாறுகிறது, அதாவது ஆறுமுறை முஹம்மது குறைஷி வியாபாரிகளை கொள்ளையடிக்க அனுப்பினார், முஹம்மதுவின் வார்த்தைகளின்படியே அவர்கள் செய்தார்கள், அதனால் தோல்வி தான் மிஞ்சியது. ஏழாவது முறையும் அனுப்பினார், இந்த முறை முஹம்மதுவின் பேச்சை கேட்காமல், சொந்தமாக முடிவு எடுத்தார்கள், இதனால் வெற்றியும் பெற்றார்கள், பொருட்களையும் கொள்ளையடித்தார்கள், எல்லாவற்றுக்கும் மேலாக, அல்லாஹ்வின் அனுமதியும் கிடைத்துவிட்டது, தண்டனையிலிருந்தும் தப்பித்தார்கள். முஹம்மதுவின் வார்த்தைகளை கேட்காததினால் கிடைத்த நன்மைகளைப் பாருங்கள்.*

*7) கடைசியாக, முஹம்மதுவையும், அல்லாஹ்வையும் வெற்றிப்பெற வைத்தவர்கள் சஹாபாக்கள் என்றுச் சொன்னால் மிகையாகாது.*

*தம்பி, நபி செய்யும் அனைத்து செயல்களுக்கும் "இறைவனின் வஹியை" வம்புக்கு இழுப்பதினால் வந்த பிரச்சனையை பார்த்தாயா?*

*முஹம்மது பேசினால் வஹி,*

*பேசாமல் இருந்தாலும் வஹி,*

*நடந்தால் வஹி,*

*சிரித்தால் வஹி,*

*விரலை ஆட்டினால் வஹி,*

*விரலை ஆட்டாமல் இருந்தால் வஹி,*

*தாடி வைத்தால் வஹி,*

*தாடியை கத்தரித்தால் வஹி,*

*மக்கள் கேள்வி கேட்டு முஹம்மது பதில் சொன்னால் வஹி,*

*பதில் சொல்லாமல் இருந்தாலும் வஹி,*

*மக்கள் கேள்வி கேட்காமலேயே அவராக பதில் சொன்னலும் வஹி*

*அவர் உண்மையைச் சொன்னாலும் வஹி,*

*பொய்யைச் சொன்னாலும் வஹி,*

*அவர் கட்டுக்கதைகளைச் சொன்னாலும் வஹி,*

*இட்டுக்கட்டிச் சொன்னாலும் வஹி*

*இப்படி ஒரு மனிதனை விக்கிரமாக பூஜிக்கிறீர்கள் நீங்கள். இதனால் விளையும் பிரச்சனைகளை பார்த்தாயா தம்பி?*

*இரண்டாவது வகை வஹி முஹம்மதுவிற்கு வருவது போல, சஹாபாக்களுக்கும் அதே வஹி வந்து அவர்கள் (அல்லாஹ்வின் விருப்பத்தின் படி) செயல்பட்டதாக மேற்கண்ட நிகழ்ச்சியில் காண்கிறோம்.*

*முஹம்மது கொள்ளையடிக்க அனுப்பியது தன் சுய விருப்பத்தின் படியா? அல்லது வஹியின் அடிப்படையிலா? தம்பி உன்னால் பதில் சொல்லமுடியுமா? [தமிழ் நாட்டின் இஸ்லாமிய அறிஞர்களிடம் இதற்கு பதில் இருந்தாலும் அனுப்புங்கள்]*

*உன்னுடைய பதிலுக்காக எதிர்ப்பார்க்கிறேன்.*

இப்படிக்கு

*உன் அண்ணன்*

*உமர்*

[***மூலம்***]

[***உமரின் ரமளான் மாத கட்டுரைகள்***]

---

***நாள் 7 - இஸ்லாமிய தாவா அழைப்பிதழ்***
***நீ இஸ்லாமை ஏற்றுக்கொண்டால், இறைத்தூதர் உன்னை கொல்லமாட்டார்***

*முந்தைய ஆறு தொடர் கட்டுரைகளை கீழேயுள்ள தொடுப்புகளை சொடுக்கி படிக்கலாம்:*

- *2013 ரமளான் நாள் 1 -* ***அன்புள்ள அண்ணாவிற்கு . . . போர் புரிவது அமைதியை நிலைநாட்டுவதற்கு அல்லவா?***
- *2013 ரமளான் நாள் 2 -* ***முஹம்மதுவும் வழிப்பறி கொள்ளைகளும்***

- *2013 ரமளான் நாள் 3 -* ***[தேன் கூட்டில் கல்லெறிந்து தேனீக்களை கோபமூட்டியது யார்? முஹம்மதுவா? மக்காவினரா?]***
- *2013 ரமளான் நாள் 4 -* **[பதிலுக்கு பதில்: நீங்கள் செல்வங்களை எடுத்துக்கொண்டீர்கள், நாங்கள் கொள்ளையடிக்கிறோம்]**
- *2013 ரமளான் நாள் 5 -* ***[முஸ்லிம் குருசேடர்களும் கிறிஸ்தவ குருசேடர்களும் (ஜிஹாதும் சிலுவைப்போர்களும்)]***
- *2013 ரமளான் நாள் 6 -* ***[ஆறு முறை தோல்வியுற்ற அல்லாஹ்விற்கு ஏழாவது முறை வெற்றியை கொடுத்த சஹாபாக்கள்]***

***ஏழாவது தொடர் கட்டுரையை இப்போது படிப்போம்.***

*அன்பான தம்பிக்கு,*

*உன் அண்ணன் எழுதும் கடிதம். நலம் நலமறிய ஆவல்.*

*இந்த ரமளான் மாதத்தில் ஒரு அருமையான தலைப்பை எனக்கு எடுத்து கொடுத்ததினால், உனக்கு நான் நன்றி செலுத்துகிறேன். இந்த கடிதத்தில் எட்டாவது வழிப்பறி கொள்ளை பற்றி மிகவும் சுருக்கமாக எழுதலாம் என்று விரும்புகிறேன். இஸ்லாம் அமைதி மார்க்கம் என்று இஸ்லாமியர்கள் மிகவும் அழுத்தம் திருத்தமாகச் சொன்னாலும், இஸ்லாமிய சரித்திரம் அவர்களின் முகங்களில் கரியை பூசி விடுகின்றது. இந்த எட்டாவது வழிப்பறி கொள்ளையிலும் இது தான் நடந்தது.*

***எட்டாவது வழிப்பறி கொள்ளை: "நஜ்து" (Nejd Raid)***

*குறைஷிகள் ஒரு புதிய வழியின் மூலமாக தங்கள் வியாபாரிகளை அனுப்பினார்கள், இதனை அறிந்த முஹம்மது, 100 பேரை அனுப்பி, அவர்களை கொள்ளையிட்டார். இதில் ஒரு லட்சம் திர்ஹம் மதிப்புள்ள பொருட்களை கொள்ளையிட்டார்கள். முஹம்மதுவிற்கு ஐந்தில் ஒரு பாகம் (20 ஆயிரம் திர்ஹம்) தரப்பட்டது, மீதமுள்ளதை சண்டையிட்டவர்களுக்கு பகிர்ந்து தரப்பட்டது. (என்னே பொருளாதாரம்! இப்படி வாரி வாரி வழங்கினால், யார் தான் சண்டைக்கு போகமாட்டேன் என்பான்?)*

*இதில் முக்கியமான நிகழ்ச்சி என்னவென்றால், இவர்கள் கைது செய்த "ஃபுர்ராத் இப்னு ஹய்யான்" என்பவருக்கு முஹம்மது கொடுத்த விடுதலையாகும். எப்படி ஒரு கைதியை முஹம்மது விடுதலை செய்தார்? தெரிந்துக்கொள்ள மேற்கொண்டு படிக்கவும்.*

***1) 'The Sealed Nectar' புத்தக ஆசிரியரின் வஞ்சகம்:***

*இந்த நஜ்து வழிப்பறி பற்றி மேற்கண்ட புகழ்பெற்ற புத்தகத்தின் ஆசிரியர் அல்லது ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்தவர் கீழ்கண்டவாறு எழுதுகிறார். (இந்த புத்தகம் "முஹம்மதுவின் வாழ்க்கை வரலாறு தலைப்பில், உலக புத்தக போட்டியில் முதலிடம் பெற்றது").*

*The caravan was carrying silver and wares whose value amounted to 100 thousand dirhams. The booty was distributed among the Muslim warriors after one- fifth had been set aside for the Prophet [pbuh]. Furat bin Haiyan embraced Islam out of his own sweet free will.[Ibn Hisham 1/50,51; Fiqh As-Seerah p.190; Rahmat-ul-lil'alameen 2/219] (The Sealed Nectar, Page No: 153)*

*[ஃபுர்ராத் என்பவர் சுய விருப்பத்தின் படியே இஸ்லாமை தழுவினாராம் – இது தான் மிகப்பெரிய பொய்]*

***2) இந்த புத்தகத்தை தமிழில் "ரஹீக்" என்ற பெயரில் மொழியாக்கம் செய்யப்பட்டது. தமிழில் எப்படி இதனை விவரிக்கிறார் என்பதை பாருங்கள்:***

*நபி (ஸல்) அவர்கள் உடனடியாக நடவடிக்கையில் இறங்கினார்கள். 100 பேர் கொண்ட வாகனப் படையை ஜைது இப்னு ஹாஸாவின் தலைமையின் கீழ் குறைஷிகளைத் தாக்க அனுப்பி வைத்தார்கள். ஜைது (ரழி) தங்களது வீரர்களுடன் விரைந்து சென்று, நஜ்து மாநிலத்தில் ~கர்தா|*

*என்ற இடத்தின் நீர் தேக்கத்திற்கு அருகில் அந்த வியாபாரக் கூட்டம் தங்கியிருந்த போது திடீரென அதன் மீது தாக்குதல் நடத்தி வியாபாரப் பொருட்களை கைப்பற்றினார்கள். ஸஃப்வானும் அக்கூட்டத்தைப் பாதுகாப்பதற்காக வந்திருந்த வீரர்களும் எவ்வித எதிர்ப்பும் காட்டாமல் உயிர் பிழைத்தால் போதும் என்று தப்பித்து ஓடினர்.*

*முஸ்லிம்கள் இக்கூட்டத்திற்கு வழிகாட்டியாக வந்த ஃபுர்ராத் இப்னு ஹய்யானைக் கைது செய்தனர். சிலர், 'இவரையன்றி மேலும் இருவரையும் முஸ்லிம்கள் கைது செய்தனர்" என்றும் கூறுகின்றனர். முஸ்லிம் வீரர்கள் இந்த வியாபாரக் கூட்டத்திடமிருந்த பாத்திரங்கள் மற்றும் வெள்ளிகளை வெற்றிப் பொருளாக எடுத்துக் கொண்டு நபி (ஸல்) அவர்களிடம் திரும்பினார்கள். இவர்கள் கொண்டு வந்த பொருட்களின் மதிப்பு ஒரு லட்சம் திர்ஹம் ஆகும். நபி (ஸல்) ஐந்தில் ஒரு பங்கை ஒதுக்கிவிட்டு மற்ற அனைத்தையும் அதில் கலந்துகொண்ட வீரர்களுக்குப் பங்கு வைத்துக் கொடுத்தார்கள். நபி (ஸல்) அவர்கள் முன்னிலையில் ஃபுராத் இஸ்லாமைத் தழுவினார்.*

*(ரஹீக் பக்கம் 252)*

*ஆங்கிலத்தில் "Furat bin Haiyan embraced Islam out of his own sweet free will" என்று ஆசிரியர் எழுதுகிறார்.*

*தமிழில் "நபி (ஸல்) அவர்கள் முன்னிலையில் ஃபுராத் இஸ்லாமைத் தழுவினார்." என்று எழுதுகிறார்.*

*ஆனால், இஸ்லாமிய சரித்திர ஆசிரியர் தபரி மற்றும் இப்னு ஹிஷாம் என்ன கூறியுள்ளார்கள்:*

*According to Tabari, he was told "If you accept Islam, the Messenger of God will not kill you" (according to Tabari's version of the event),[5] he accepted Islam out of his own free will, and was allowed to go free according to Ibn Hisham.[6]*

*Source: **http://en.wikipedia.org/wiki/Nejd_Caravan_Raid***

***கழுத்து பக்கத்தில் கத்தி வைத்து, இஸ்லாமை ஏற்றுக்கொள்வாயா இல்லையா? என்று கேட்டால், உயிர் பயம் உள்ளவன் என்ன முடிவு எடுப்பான்:***

*கைதியாக பிடிபட்ட "ஃபுர்ராத்" என்பவரிடம், "**நீ இஸ்லாமை ஏற்றுக்கொள், இல்லையானால் இறைத்தூதர் உன்னை கொன்றுவிடுவார்**" என்று முஸ்லிம்கள் கூறினார்கள். [இப்படி கேட்க முஸ்லிம்களுக்கு கேவலாக தென்படவில்லை? இப்படி மற்றவர்களை பயமுறுத்தி முஸ்லிமாக மாற்றுவதை விட,. . . . . தம்பி இதற்கு மேலே என்ன சொல்லவேண்டும் என்று எனக்கு தெரியவில்லை.]*

*உயிருக்கு பயந்த "ஃபுர்ராத்" என்பவர் என்னசெய்வார்? நான் இஸ்லாமை ஏற்கமாட்டேன் என்றுச் சொல்லி மரிக்க தயாராக இருப்பாரா? அல்லது "ஆம் நான் இஸ்லாமியனாக மாறுகிறேன்" என்றுச் சொல்லி உயிர் தப்பிச் செல்வாரா?*

*ஒரு புத்திசாலியான மனிதன், தன் உயிரை காப்பாற்றிக்கொள்ள என்ன முடிவு எடுப்பாரோ அதே முடிவைத்தான் இவரும் எடுத்துள்ளார். அதாவது அல்லாஹ்வின் மார்க்கத்தில் தன்னை இணைத்துக்கொண்டார், இதனால் விடுதலை அடைந்தார், புத்திசாலியான மனிதன் இவர்.*

*இந்த விவரங்களை அப்படியே எழுதினால், இஸ்லாமின் மானம் மரியாதை காற்றில் பறந்துவிடும் என்பதால், இஸ்லாமியரல்லாதவர்கள் கேவலமாக பேசுவார்கள் என்பதால் மேற்கண்ட புத்தகத்தை எழுதியவர்கள், மொழியாக்கம் செய்தவர்கள், மிகப்பெரிய உண்மையை மறைத்து பொய்யை எழுதியுள்ளார்கள். இஸ்லாமை இப்படி பொய் சொல்லித்தான் காப்பாற்றவேண்டுமா? வெட்கக்கேடு, மானக்கேடு.*

*தம்பி, இந்த கடிதத்தின் ஆரம்பத்தில் நான் எழுதியது போல, "இஸ்லாம் அமைதி மார்க்கம்" என்று முஸ்லிம்கள் என்ன தான் கூக்குரல் இட்டு கும்மாளம் போட்டாலும், இஸ்லாமிய சரித்திரம், அவர்களின் கூக்குரலை அடக்கிவிடுகின்றது.*

- *தம்பி, இஸ்லாம் ஒரு அராஜக மார்க்கமாகும்.*
- *இஸ்லாம் ஒரு வன்முறையினால் பரவின மார்க்கமாகும்.*
- *முஹம்மது வன்முறையினால் தான் இஸ்லாமை பரப்பினார்.*
- *இஸ்லாம் மக்களை பயமுறுத்தி இஸ்லாமியர்களாக மாற்றும் மதமாகும்.*
- *இதற்கு யாராவது மறுப்பு கூறமுடியுமா?*

*தம்பி, உன்னைத் தான் கேட்கிறேன், மனசாட்சியோடு சிந்தித்துப்பார்.*

*உன்னை அடுத்த கடிதத்தில் (அடுத்த வழிப்பறி கொள்ளை நிகழ்ச்சியோடு) சந்திக்கிறேன்.*

*உன் பதில் கடிதத்துக்காக காத்துக்கொண்டு இருக்கும் உன் அண்ணன்.*

*உமர்.*

***மூலம்***

***உமரின் ரமளான் மாத கட்டுரைகள்***

---

***நாள் 8 - மருமகனின் மனதை "கொள்ளையிட்ட" மாமனார். மாமனாரின் "கொள்கையை" கொள்ளையிட்ட மருமகன்***

*முந்தைய ஏழு தொடர் கட்டுரைகளை கீழேயுள்ள தொடுப்புகளை சொடுக்கி படிக்கலாம்:*

- *2013 ரமளான் நாள் 1 - **அன்புள்ள அண்ணாவிற்கு . . . போர் புரிவது அமைதியை நிலைநாட்டுவதற்கு அல்லவா?***
- *2013 ரமளான் நாள் 2 - **முஹம்மதுவும் வழிப்பறி கொள்ளைகளும்***
- *2013 ரமளான் நாள் 3 - **தேன் கூட்டில் கல்லெறிந்து தேனீக்களை கோபமூட்டியது யார்? முஹம்மதுவா? மக்காவினரா?***
- *2013 ரமளான் நாள் 4 - **பதிலுக்கு பதில்: நீங்கள் செல்வங்களை எடுத்துக்கொண்டீர்கள், நாங்கள் கொள்ளையடிக்கிறோம்***
- *2013 ரமளான் நாள் 5 - **முஸ்லிம் குருசேடர்களும் கிறிஸ்தவ குருசேடர்களும் (ஜிஹாதும் சிலுவைப்போர்களும்)***
- *2013 ரமளான் நாள் 6 - **ஆறு முறை தோல்வியுற்ற அல்லாஹ்விற்கு ஏழாவது முறை வெற்றியை கொடுத்த சஹாபாக்கள்***
- *2013 ரமளான் நாள் 7 - **இஸ்லாமிய தாவா அழைப்பிதழ், நீ இஸ்லாமை ஏற்றுக்கொண்டால், இறைத்தூதர் உன்னை கொல்லமாட்டார்***

*அன்பான தம்பிக்கு,*

*உன் அண்ணன் எழுதும் கடிதம். என் கடிதங்களை நீ படிக்கிறாய் என்று நம்புகிறேன். உன் உடல் நிலை சரியில்லை என்று அம்மா சொன்னார்கள், உனக்கு வயிற்றுப்போக்கு ஏற்பட்டதாக சொன்னார்கள். இப்போது எப்படி உள்ளது? உடலை ஆரோக்கியத்துடன் வைத்துக்கொள் தம்பி. நோன்பு என்றால் பகலில் வயிற்றை காலியாக வைத்துவிட்டு, இரவில் வயிறு தாங்கமுடியாத அளவு சாப்பிடுவது அல்ல.*

*ஒரு முஸ்லிம் குடும்பத்தில், சாதாரண மாதங்களில் உணவிற்காக ஆகும் செலவை விட, நோன்பு மாதத்தில் (ரமளான்) அதிகமாக செல்வாகிறது. ரமளானில் உணவிற்கு இப்படி செலவு அதிகமானால், இம்மாதத்தை "நோன்பு மாதம்" என்று ஏன் நாம் அழைக்கவேண்டும்? உண்மையைச் சொல்லவேண்டுமென்றால், இந்த மாதம் "விருந்து மாதம்" என்று அழைக்கலாம், பல வகையான பண்டங்கள், மாமிச உணவுகள் அதிகமாக செலவிடப்படுகின்ற மாதம் இது, இதை நோன்பு மாதம் என்று சொல்வது தவறல்லவா? என்னடா, அண்ணன் இன்று போர்கள்/சண்டைகள் பற்றி பேசுவதை விட்டுவிட்டு, சாப்பிடுவது பற்றி பேசுகிறார் என்று நினைக்கிறாயா? நீ அம்மாவிடம் உன் உடல் நிலைப்பற்றி சொன்னாய் அல்லவா, அதுவும் அளவிற்கு அதிகமாக நீ சாப்பிட்டதால் வயிற்றில் சிறிது பிரச்சனை என்றுச் சொன்னாய் அல்லவா! அதனால் உன் ஜீரண*

*பிரச்சனை நீங்க சிறிது சோடா கொடுக்கலாம் என்று எண்ணி சில வரிகளை எழுதினேன். சரி, இப்போது விஷயத்துக்கு வருகிறேன்.*

***நாள் 8 – மருமகனின் மனதை "கொள்ளையிட்ட" மாமனார். மாமனாரின் கொள்கையை கொள்ளையிட்ட மருமகன்***

*தம்பி, இந்த கட்டுரையில் இன்னொரு (ஒன்பதாவது) வழிப்பறி கொள்ளையை காண்போம்.*

***1) மருமகனின் வியாபார பொருட்களை கொள்ளையிட்ட மாமனார்:***

*ஹிஜ்ரி 6ம் ஆண்டு, ஐந்தாம் மாதத்தில் இஸ்லாமியர்கள் குறைஷி வியாபாரிகளை தாக்கி கொள்ளையிடுகின்றனர். இந்த முறை இந்த வியாபாரத்தை நடத்திச் செல்பவர் யார் என்று பார்த்தால், முஹம்மதுவின் மருமகன் ஆவார்.*

*இதைப் பற்றி ரஹீக் புத்தகத்தில் (பக்கம் 332) என்ன எழுதியிருக்கிறது என்பதை படிப்போமா?*

*5) ஹிஜ்ரி 6, ஜுமாதா அல்ஊலா மாதத்தில் "ஈஸ்" என்ற இடத்திற்கு ஜைத் அவர்களை 170 வீரர்களுடன் அனுப்பி வைத்தார்கள். அங்கு குறைஷிகளின் வியாபாரக் கூட்டம் நபி (ஸல்) அவர்களின் மருமகனார் அபுல் ஆஸின் தலைமையின் கீழ் தங்கியிருந்தது. அங்கு சென்று முஸ்லிம்கள் அனைத்தையும் கைப்பற்றினர். ஆனால், அபுல் ஆஸ் தப்பிச் சென்று மதீனாவில் நபியவர்களின் மகளார் ஜைனபிடம் அடைக்கலம் தேடினார். மேலும், தனது பொருட்களைத் திருப்பித் தருமாறு நபியவர்களிடம் கோரும்படி ஜைனபிடம் கேட்டுக் கொண்டார். அவரும் தனது கணவன் கோரிக்கையை நபியவர்களிடம் சொல்லவே, நபியவர்கள் பொருள்களை திரும்பத் தருமாறு மக்களிடம் கேட்டார்கள். ஆனால், எவரையும் அதற்காக நிர்பந்தப் படுத்தவில்லை.*

*நபியவர்களின் விருப்பத்திற்கிணங்க சிறிய பெரிய அனைத்து பொருட்களையும் நபித் தோழர்கள் திரும்பக் கொடுத்து விட்டனர். அபுல் ஆஸ் அவற்றை எடுத்துக் கொண்டு மக்கா சென்று உரியவர்களிடம் அப்பொருட்களை ஒப்படைத்துவிட்டு இஸ்லாமை ஏற்று மதீனா திரும்பினார். நபி (ஸல்) அவர்கள் மூன்று வருடம் கழித்துத் திரும்பிய தமது மருமகன் அபுல் ஆஸிற்குத் தனது மகள் ஜைனபை முதல் திருமண ஒப்பந்தத்தைக் கொண்டே சேர்த்து வைத்தார்கள்.*

***இப்னு இஷாக்:***

*இப்னு இஷாக்கின் சீரத் ரஸூல் அல்லாஹ் புத்தகத்தில் பக்கம் 316, 317ம் பக்கத்தில் இந்த நிகழ்ச்சி பற்றி கூறப்பட்டுள்ளது. இந்த புத்தகத்தில் என்னை மிகவும் கவர்ந்த விஷயம் என்னவென்றால், முஹம்மது முஸ்லிம்களிடம் ஒரு வேண்டுகோளை முன்வைப்பதும், அதற்கு முஸ்லிம்கள் கொடுத்த பதிலுமாகும். அதாவது தன் மருமகனின் வியாபார பொருட்களை நீங்கள் விரும்பினால், அவருக்கு திருப்பித் தரலாம், அல்லது அவைகளை அல்லாஹ் உங்களுக்கு கொடுத்த பொருட்களாகையால், உரிமையோடு வைத்துக்கொள்ளலாம் என்று முஹம்மது கூறினார்: இதனை இப்போது படியுங்கள்:*

*"This man is related to us as you know and you have taken property of his. If you think well to restore it to him we should like that; but if you will not it is booty which God has given you and you have the better right to it." (THE LIFE OF MUHAMMAD, A translation of IBN ISHAQ's Sirat Rasul Allah, by A Guillaume)*

***2) முஹம்மது ஒரு நல்ல அப்பா!***

*முஹம்மது தன் மகளுக்கு ஒரு நல்ல அப்பாவாக இந்த நிகழ்ச்சியில் காணப்படுகிறார். நீங்கள் இப்னு இஷாக்கின் சரித்திரத்தில் இந்த நிகழ்ச்சியை படித்தால், முஹம்மதுவின் மகள் ஜைனப் எல்லாருக்கும் முன்பாக தன்னிடம் பாதுகாப்புக்காக சேர்ந்து இருக்கும் தன் கணவர் பற்றி கூறுகிறார். இதனை கேட்ட முஹம்மது தொழுகை முடிந்ததும், தன் மகளின் விருப்பத்தின் படியே செய்தார். தன் மருமகனின் பொருட்களை திருப்பி தரும் படி முஸ்லிம்களிடம் பேசி, தன் மகளுக்கு நன்மையை செய்தார். அதாவது ஜைனப்பின் கணவர் திரும்ப வந்து தன் மனைவியோடு வாழ்க்கை நடத்துகிறார். ஆக, முஹம்மது ஒரு அருமையான அப்பாவாக இங்கு காணப்படுகிறார். தன்*

*மகளின் வாழ்க்கையை திரும்ப கட்டிய நல்ல அப்பா முஹம்மது ஆவார். [ஆனால், பத்ரூ போருக்கு பிறகு தன் மகளையும், அவரது கணவரையும் பிரித்தவரும் இதே அப்பா தான்!]*

### *3) முஹம்மது, ஒரு நல்ல மாமனார்:*

*முஹம்மது நல்ல அப்பாவாக மட்டுமல்ல, நல்ல மாமனாராகவும் நடந்துக்கொண்டார். தன் சகாக்களிடம் ஒரு வேண்டுகோளை வைக்கிறார். இவரின் மீது வைத்த மரியாதையின் காரணமாக முஸ்லிம்கள் எல்லா பொருட்களையும் திருப்பித் தருகின்றனர். இதனால், முஹம்மதுவின் மருமகனார் மக்கா சென்று, யார் யாருக்கு எவைகளை தரவேண்டுமோ அவைகளை கொடுத்துவிடுகிறார். இவர் ஒரு நல்ல வியாபாரி என்பதையும் நிருபித்துவிட்டார்.*

### *4) முஹம்மது ஒரு நல்ல தலைவரா?*

*பி ஜைனுல் ஆபீதின் போன்ற இஸ்லாமிய அறிஞர்கள் சில நேரங்களில் இன்றைய அரசியல் தலைவர்களோடு, முஹம்மதுவை ஒப்பிட்டு பேசுவார்கள். இன்றைய தலைவர்கள் தங்கள் சொந்த குடும்பத்திற்காக அனேக வசதிகளை சலுகைகளை அரசாங்க அதிகாரத்தை பயன்படுத்தி பெற்றுக்கொள்வார்கள். சட்டங்களை தங்களுக்கு சாதகமாக பயன்படுத்துவார்கள். தங்களுக்காக, தங்கள் மகன், மகள் போன்றவர்களுக்காக அநீதியான முறையில் சொத்துக்களை குவித்துக்கொள்வார்கள். ஆனால், எங்கள் இறைத்தூதரோ, இப்படியெல்லாம் செய்யவே இல்லை என்று அழுத்தந்திருத்தமாக பீஜே அவர்கள் கூறுவார்கள். ஆனால், இந்த நிகழ்ச்சியை நாம் பார்த்தால், நமக்கு தெரிவது என்ன? ஒரு நல்ல தலைவராக முஹம்மது நடந்துக்கொண்டாரா? உலக மக்களுக்கு ஒரு சட்டம் தனக்கு ஒரு சட்டம். தன் மகள் விரும்புகிறார் என்பதற்காக, தன் மருமகன் என்பதற்காக இவர் 'கொள்ளையிட்ட சொத்துக்களை' திரும்ப தன் மருமகனிடமே கொடுப்பதற்காக தன் சகாக்களோடு பேசுகிறார்.*

*தன் சகாக்களின் அனுமதியோடு தானே, முஹம்மது செயல்பட்டார் என்று சிலர் கேட்கலாம். ஆனால், கேள்வி என்னவென்றால், " இவர் தன் மகளுக்காக, மருமகனுக்காக சகாக்களிடம் கேட்டே இருக்கக்கூடாது, அப்போது தான் இவர் ஒரு நல்ல தலைவர், நீதியானவர்" என்று தெரியவரும். ஆனால், இவரோ, ஒரு விண்ணப்பத்தை முன்வைக்கிறார், பொதுவாக முஹம்மதுவின் மீது அன்புவைத்திருக்கும் நபர்கள் என்ன செய்வார்கள்? முஹம்மதுவிற்கு எது மகிழ்ச்சியைத் தருமோ அதையேச் செய்வார்கள். இதை அறிந்து தான் இவர் கேட்கிறார், இவர் கேட்டது போலவே நடந்தது.*

*ஆக, முஹம்மது ஒரு நல்ல அப்பா ஆவார், நல்ல மாமனார் ஆவார், ஆனால் நல்ல தலைவர் அல்ல. தன் சொந்த மகளுக்காக தன் அதிகாரத்தை பயன்படுத்தி சலுகைகளை பெற்றுக்கொண்டார். இன்றைய அரசியல் தலைவர்களுக்கும் முஹம்மதுவிற்கும் இந்த விஷயத்தில், எந்த ஒரு வித்தியாசமும் இல்லை என்பதை இதன் மூலம் அறியலாம்.*

*உண்மையைச் சொல்லவேண்டுமென்றால், முஹம்மது இப்படி தன் மகளுக்காக தன் அதிகாரத்தை துர்பிரயோகம் செய்தது இது இரண்டாவது முறையாகும்.*

### *பத்ரூ போரும், முஹம்மதுவின் அதிகார துர்பிரயோகமும்:*

*பத்ரூ போர் நடக்கும் போது, அதில் இதே மருமகன் மக்காவினரின் சார்பாக பங்கு பெற்றார், மேலும் கைதியாக முஸ்லிம்களால் பிடிபட்டார். தன் கணவரை விடுவிக்க, முஹம்மதுவின் மகள் (அப்போது அவர்கள் மக்காவில் கணவரோடு இருந்தார்கள், ஹிஜ்ரா செய்யவில்லை) தனக்கு தன் தாய் கதிஜா அவர்கள் திருமண பரிசாக கொடுத்த நக்லெஸ்ஸை கொடுத்து அனுப்பி, அதை வைத்துக்கொண்டு, தன் கணவரை விடுவிக்கும் படி முஹம்மதுவிடம் அனுப்பினார்கள். அந்த நக்லெஸ்ஸை கண்டதும், முஹம்மதுவிற்கு தம்முடைய காலஞ்சென்ற மனைவி கதிஜா ஞாபகம் மேலோங்க, தன் சகாக்களிடம் முஹம்மது விண்ணப்பம் வைத்த போது, அவர்கள் எந்த ஒரு பணத்தையும் (நக்லஸ்ஸையும்) எடுத்துக்கொள்ளாமல், அடிமையாக பிடிபட்ட முஹம்மதுவின் மருமகனை விடுவிக்க ஒப்புக்கொண்டார்கள். முஹம்மதுவின் மீது வைத்த அன்பின் அடிப்படையில் அவர்கள் இப்படி செய்தார்கள்.*

*சட்டத்தின் முன் அனைவரும் சமம் என்ற கோட்பாட்டை முஹம்மது இந்த இரண்டு நிகழ்ச்சிகளின் மூலம் புறக்கணித்துள்ளார், தன் சகாக்களின் அன்பை தனக்கு*

*சாதகமாக்கிவிட்டார். ஆக, முஹம்மது ஒரு நல்ல தலைவர் அல்ல, இன்றைய தீய அரசியல் தலைவர்களுக்கு இவர் எந்த வகையிலும் குறைவில்லை.*

### *5) மாமனாரின் கொள்கையை கொள்ளையிட்ட மருமகன்*

*வியாபாரத்திற்கு கொண்டு வந்த அனைத்து பொருட்களையும் முஹம்மது திருப்பிகொடுக்க, இவர் அவைகளை மக்காவிற்கு கொண்டு வந்து, யார் யாருக்கு தரவேண்டுமோ அவர்களுக்கு கொடுத்துவிடுகிறார், அதன் பிறகு மதினாவிற்கு வந்து, தான் முஸ்லிமாக மாறுவதாக கூறுகிறார். முஹம்மது தன் மகளை மறுபடியும் இவருக்கு மனைவியாக தருகிறார். இப்படி முஹம்மதுவின் மருமகன் முஸ்லிமாக மாறுகிறார், இவர் ஒரு நல்ல வியாபாரி என்பதை நிருபித்துவிட்டார். ஒரு நல்ல வியாபாரி எந்த இடத்தில் அதிக லாபம் வருமோ அந்த இடத்தில் தானே வியாபாரம் செய்வார்?*

*[இந்த நிகழ்ச்சி நடந்து ஒரு ஆண்டுக்கு பிறகு, முஹம்மதுவின் மகள் மரித்துவிட்டார்கள், அதன் பிறகு ஒரு ஆண்டில் இந்த மருமகனும் மரித்துவிடுகிறார்]*

***முடிவுரை:*** *தம்பி, உன் இறைத்தூதர் ஒரு நல்ல அப்பாவாக இருந்தார், மாமனாராக இருந்தார், ஆனால் நல்ல நீதியான தலைவராக வாழ தவறிவிட்டார். தொண்டர்களின் அறியாமையை மூலதனமாக வைத்து வாழும் அரசியல் தலைவரைப் போல, இவரும் நடந்துக்கொண்டார். தன் குடும்பம், தன் மகள்கள் என்றால் முஹம்மதுவிற்கு அன்பு அப்படியே பொங்கிவிடும், ஆனால், மற்றவர்கள் என்றால் அல்லாஹ் குறுக்கே வந்துவிடுவார், இஸ்லாம் குறுக்கே வந்துவிடும், ஷரியா சட்டம் குறுக்கே வந்துவிடும். ஊருக்குத் தான் உபதேசம் உனக்கு இல்லையடி என்றுச் சொன்னானாம் ஒருத்தன், அது போல முஹம்மதுவின் சில விஷயங்களை பொறுத்தமட்டில் தனக்கு ஒரு நியாயம், ஊருக்கு இன்னொரு நியாயம்.*

*தம்பி, உன்னிடம் ஒரு கேள்வி கேட்கனும், அதாவது தாங்கள் மக்காவில் விட்டுவந்த சொத்துக்களை மீட்கத் தான் கொள்ளையிட்டார்கள் என்றுச் சொன்னால், எத்தனை ஆண்டுகள் இதனை தொடர்ந்தார்கள்? தொடர்ந்து கொள்ளையடித்துக்கொண்டே இருந்தார்களே! இவர்களுடைய சொத்துக்களுக்கு இணையான பொருட்களை கொள்ளையிட்ட பிறகும் ஏன் தொடர்ந்து வழிப்பறி கொள்ளையில் உன் இறைத்தூதர் ஈடுபட்டார்?*

*தம்பி, இஸ்லாமின் கொள்ளை ஒரு தொடர் கதையாக தொடர்ந்துக்கொண்டே இருந்தது. உலகத்திலேயே கொள்ளையை ஒரு வழிமுறையாக பின்பற்றிக்கொண்டு, அது நல்லது என்றுச் சொல்லி இன்றுவரை மக்களை ஏமாற்றிக்கொண்டு இருக்கின்ற ஒரே மார்க்கம் 'இஸ்லாம்' என்றுச் சொன்னால் மிகையாகாது தம்பி.*

*உன்னை அடுத்த கடிதத்தில் சந்திக்கிறேன். அதுவரைக்கும் அடுத்த வழிப்பறி கொள்ளை எது? என்று சிறிது ஆய்வு செய்து பார்த்துக்கொள்.*

*இப்படிக்கு,*

*உன் அண்ணன்*

*உமர்*

***மூலம்***

***உமரின் ரமளான் மாத கட்டுரைகள்***

---

### *நாள் 9 - ஏழு ஆண்டுகள் கொள்ளையிட்ட பிறகும், முஸ்லிம்கள் ஏழ்மையிலிருந்து விடுபடவில்லையா?*

*முந்தைய எட்டு தொடர் கட்டுரைகளை கீழேயுள்ள தொடுப்புகளை சொடுக்கி படிக்கலாம்:*

- *2013 ரமளான் நாள் 1 -* **[அன்புள்ள அண்ணாவிற்கு . . . போர் புரிவது அமைதியை நிலைநாட்டுவதற்கு அல்லவா?]**
- *2013 ரமளான் நாள் 2 -* **[முஹம்மதுவும் வழிப்பறி கொள்ளைகளும்]**
- *2013 ரமளான் நாள் 3 -* **[தேன் கூட்டில் கல்லெறிந்து தேனீக்களை கோபமூட்டியது யார்? முஹம்மதுவா? மக்காவினரா?]**
- *2013 ரமளான் நாள் 4 -* **[பதிலுக்கு பதில்: நீங்கள் செல்வங்களை எடுத்துக்கொண்டீர்கள், நாங்கள் கொள்ளையடிக்கிறோம்]**
- *2013 ரமளான் நாள் 5 -* **[முஸ்லிம் குருசேடர்களும் கிறிஸ்தவ குருசேடர்களும் (ஜிஹாதும் சிலுவைப்போர்களும்)]**
- *2013 ரமளான் நாள் 6 -* **[ஆறு முறை தோல்வியுற்ற அல்லாஹ்விற்கு ஏழாவது முறை வெற்றியை கொடுத்த சஹாபாக்கள்]**
- *2013 ரமளான் நாள் 7 -* **[இஸ்லாமிய தாவா அழைப்பிதழ், நீ இஸ்லாமை ஏற்றுக்கொண்டால், இறைத்தூதர் உன்னை கொல்லமாட்டார்]**
- *2013 ரமளான் நாள் 8 -* **[மருமகனின் மனதை "கொள்ளையிட்ட" மாமனார். மாமனாரின் "கொள்கையை" கொள்ளையிட்ட மருமகன்]**

*அன்பான தம்பிக்கு,*

*உன் கடிதத்திற்காக நான் கடந்த சில நாட்களாக காத்திருக்கிறேன், ஆனால், இதுவரை நீ பதில் எழுதவில்லை. உனக்கு அலுவலகத்தில் வேலை அதிகமாக இருக்கின்றதா? உனக்கு நேரம் கிடைக்கும் போது சிலவரிகளை எழுதி எனக்கு மெயில் அனுப்பு.*

*இந்த கடிதத்தில், 10வது வழிப்பறி கொள்ளைப் பற்றி சுருக்கமாக காண்போம்.*

*ரஹீக் என்ற புத்தகத்தில் இந்த "இலைப் படை" என்றுச் சொல்லக்கூடிய வழிப்பறி பற்றி கீழ்கண்டவாறு கூறப்பட்டுள்ளது. முதலில் இதனை நீ படித்துக்கொள், அதன் பிறகு சில கேள்விகளை நான் உன்னிடம் கேட்கிறேன்.*

***ரஹீக் - பக்கம் 333:***

*8) "ஸயத்துல் கபத்' எனப்படும் இப்படை ஹிஜ்ரி 8, ரஜப் மாதத்தில் அனுப்பப்பட்டது என்று கூறப்படுகிறது. இச்சம்பவத்தின் தொடரை நாம் பார்க்கும் போது இது ஹுதைபிய்யா உடன்படிக்கைக்கு சற்று முன் நடைபெற்றது என்று தெரிய வருகிறது. இச்சம்பவம் தொடர்பாக இதில் கலந்து கொண்ட ஜாபிர் (ரழி) அறிவிப்பதாவது: '300 வாகன வீரர்களை அபூ உபைதாவின் தலைமையில் நபி (ஸல்) அவர்கள் அனுப்பினார்கள். நாங்கள் குறைஷிகளுடைய வியாபாரக் கூட்டத்தை எதிர்பார்த்து பதுங்கி இருந்தோம். எங்களுக்குக் கடுமையான பசி ஏற்பட்டதால் காய்ந்த இலைகளைத் தின்றோம். எனவே, இப்படைக்கு "ஜய்ஷுல் கபத்" - இலை படை- என்று பெயர் வந்தது. . . . அதற்குப் பின் கடலிலிருந்து "அம்பர்" என்ற மிகப்பெரிய மீன் ஒன்று எங்களுக்குக் கிடைத்தது. அதை நாங்கள் பதினைந்து நாட்கள் சாப்பிட்டோம். அதனுடைய கொழுப்பை எண்ணெயாக பயன்படுத்தி தடவிக் கொண்டோம். அதன் மூலம் எங்களுடைய உடல்கள் நல்ல ஆரோக்கியமடைந்தன. . . . . .*

*. . . . அதனுடைய இறைச்சியிலிருந்து பெருமளவு நாங்கள் சேகரித்து வைத்துக் கொண்டோம். மதீனா திரும்பியவுடன் நபி (ஸல்) அவர்களிடம் இச்செய்தியைக் கூறிய போது இது அல்லாஹ் உங்களுக்கு அளித்த உணவாகும். உங்களிடம் ஏதாவது அதில்மீதமிருந்தால் எனக்கும் உண்ணக் கொடுங்கள் என்றார்கள். நாங்கள் அதிலிருந்து நபி (ஸல்) அவர்களுக்குக் கொடுத்தோம். (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)*

*இது ஹுதைபிய்யா உடன்படிக்கைக்கு முன் நடந்திருக்க வேண்டும் என்று நாம் கூறியதற்குக் காரணம், முஸ்லிம்கள் ஹுதைபிய்யா உடன்படிக்கைக்குப் பின் எந்தவொரு வியாபாரக் கூட்டத்தையும் கைப்பற்றுவதற்காக செல்லவில்லை.*

*இந்த நிகழ்ச்சி பற்றி புகாரி ஹதீஸ் தொகுப்பிலும் பதிவு செய்யப்பட்டுள்ளது.*

*(பார்க்க: பாகம் 3, அத்தியாயம் 56, எண் 2983, பாகம் 4, அத்தியாயம் 64, எண்கள் 4360, 4361, 4362, பாகம் 6, அத்தியாயம் 72, எண்கள் 5493 & 5494)*

***1) ஏழு ஆண்டுகள் கொள்ளையடித்தும். . . .***

*எங்கள் இறைத்தூதர் உலகிலேயே சிறந்தவர் என்று பெருமையடித்துக் கொள்ளும் என் அருமை தம்பியே! முஸ்லிம்கள் மக்காவில் விட்டுவந்த சொத்துக்களைத் திரும்ப பெறுவதற்கு தான் அவர்கள் குறைஷிகளின் வியாபாரிகளை கொள்ளையிட்டார்கள் என்றுச் சொல்லும் என் தம்பியே!*

• *ஏழு ஆண்டுகள் குறைஷிகளை கொள்ளையிட்டும், போர்கள் புரிந்தும், போரின் மூலம் கிடைத்த செல்வங்களை தங்களுக்குள் பங்கிட்டுக் கொண்டுவிட்ட பிறகும், முஸ்லிம்களின் ஏழ்மை அவர்களை விட்டு போகவில்லையா?*

• *மதினாவிற்கு வந்த பிறகு, தொடர்ந்து வழிப்பறி கொள்ளைகளில் ஈடுபட்டு, போர்கள் புரிந்து, கொலைகள் செய்து, மற்றவர்களின் இரத்தத்தை சிந்தி சம்பாதித்த சொத்துக்கள் உங்கள் இறைத்தூதருக்கு போதவில்லையா?*

• *ஹிஜ்ரி எட்டாவது ஆண்டிலுமா, குறைஷிகளின் வியாபாரிகளை தாக்க உங்கள் இறைத்தூதர் முஸ்லிம்களை அனுப்பவேண்டும்? அப்படி எவ்வளவு சொத்துக்களை உங்கள் முஸ்லிம்கள் மக்காவில் விட்டு வந்தார்கள்?*

• *இந்த நிகழ்ச்சியில் முஸ்லிம்கள் கண்ட அந்த பெரிய மீனை கொடுத்தது அல்லாஹ் என்று முஹம்மது கூறியுள்ளாரே! இப்படி கொள்ளையடிக்க தன் அடியார்களை அனுப்புவது அல்லாஹ்வின் வேலையா? இப்படிப்பட்ட இறைவனையா நீ வணங்குகிறாய் தம்பி?*

• *ஏழு ஆண்டுகளாக கொள்ளையிட்ட பிறகுமா முஸ்லிம்களின் ஏழ்மையை போக்க அல்லாஹ்வினால் முடியவில்லை? தம்பி, இந்த நிகழ்ச்சிகள் முஸ்லிம்களின் ஏழ்மையை காட்டவில்லை, அவர்களின் பழிவாங்கும் தன்மையையும், அதிகார துர்பிரயோகத்தையும், ஹிட்லரைப்போல சர்வாதிகாரத்தனத்தையுமே காட்டுகிறது.*

*இவ்வளவு விவரங்களை உனக்குச் சொல்லியும், இன்னும் நீ இஸ்லாம் தான் உண்மையான மார்க்கம் என்று நம்புவாயானால், உன்னை என் தம்பி என்றுச் சொல்ல எனக்கு கூச்சமாக இருக்கிறது. ஒவ்வொரு சின்ன விஷயத்திலும் நேர்மையையும், உண்மையையும் கடைபிடித்த நீ, இன்று இவ்வளவு பெரிய குற்றங்களுக்கு வக்காளத்து வாங்குவதைக் கண்டால் எனக்கு ஆச்சரியமாக உள்ளது.*

*உன்னை அடுத்த கடிதத்தில் சந்திக்கிறேன்.*

*இப்படிக்கு*

*உன் பதிலுக்காக காத்திருக்கும் உன் அண்ணன்,*

*உமர்*

***மூலம்***

***உமரின் ரமளான் மாத கட்டுரைகள்***

---

***நாள் 10 - உலக பொருட்களுக்காக முஸ்லிம்களையே கொலை செய்யும் சஹாபாக்கள்***

*முந்தைய எட்டு தொடர் கட்டுரைகளை கீழேயுள்ள தொடுப்புகளை சொடுக்கி படிக்கலாம்:*

- *2013 ரமளான் நாள் 1 -* ***[அன்புள்ள அண்ணாவிற்கு . . . போர் புரிவது அமைதியை நிலைநாட்டுவதற்கு அல்லவா?]***
- *2013 ரமளான் நாள் 2 -* ***[முஹம்மதுவும் வழிப்பறி கொள்ளைகளும்]***
- *2013 ரமளான் நாள் 3 -* ***[தேன் கூட்டில் கல்லெறிந்து தேனீக்களை கோபமூட்டியது யார்? முஹம்மதுவா? மக்காவினரா?]***
- *2013 ரமளான் நாள் 4 -* ***[பதிலுக்கு பதில்: நீங்கள் செல்வங்களை எடுத்துக்கொண்டீர்கள், நாங்கள் கொள்ளையடிக்கிறோம்]***
- *2013 ரமளான் நாள் 5 -* ***[முஸ்லிம் குருசேடர்களும் கிறிஸ்தவ குருசேடர்களும் (ஜிஹாதும் சிலுவைப்போர்களும்)]***
- *2013 ரமளான் நாள் 6 -* ***[ஆறு முறை தோல்வியுற்ற அல்லாஹ்விற்கு ஏழாவது முறை வெற்றியை கொடுத்த சஹாபாக்கள்]***
- *2013 ரமளான் நாள் 7 -* ***[இஸ்லாமிய தாவா அழைப்பிதழ், நீ இஸ்லாமை ஏற்றுக்கொண்டால், இறைத்தூதர் உன்னை கொல்லமாட்டார்]***
- *2013 ரமளான் நாள் 8 -* ***[மருமகனின் மனதை "கொள்ளையிட்ட" மாமனார், மாமனாரின் "கொள்கையை" கொள்ளையிட்ட மருமகன்]***
- *2013 ரமளான் நாள் 9 -* ***[ஏழு ஆண்டுகள் கொள்ளையிட்ட பிறகும், முஸ்லிம்கள் ஏழ்மையிலிருந்து விடுபடவில்லையா?]***

*அன்பான தம்பிக்கு,*

*நீ எழுதிய கடிதத்தை படித்தேன்.*

*நீ பொறுமையை இழந்தவனாக மிகவும் சோர்வாக எழுதியிருந்தாய். இனி இஸ்லாமிய போர்கள் பற்றி இம்மாதம் என்னிடம் உரையாடமாட்டாய் என்றும் கூறியிருந்தாய். சில மழைத்துளிகளை தாங்கிக்கொள்ள முடியாத அளவிற்கு பலவீனமாக இருக்கும் நீ, மகா சமுத்திரமாக இருக்கும் இதர இஸ்லாமிய சரித்திரத்தை எப்படி ஜீரணித்துக்கொள்வாய்.*

*இதோ இந்த கடிதத்தில், கடைசியாக ஒரு நிகழ்ச்சிப் பற்றி எழுதி, உன் விருப்பத்தின் படி, இவ்வாண்டு ரமளான் தொடரை முடித்துக்கொள்கிறேன்.*

***உலக பொருட்களுக்காக முஸ்லிம்களையே கொலை செய்யும் சஹாபாக்கள்:***

*குரு எப்படியோ அப்படியே சீடர்களும் இருப்பார்கள். ஒரு மனிதன் எவைகளை அதிகமாக கேட்கிறானோ, சிந்திக்கிறானோ அவைகளைப்போலவே அவன் மாறிவிடுகின்றான். அன்பு பற்றியும், மற்றவர்களை நேசிப்பது பற்றியும் ஒரு மனிதன் பல ஆண்டுகள் போதிக்கப்பட்டால், அதன் பாதிப்பு நிச்சயமாக அவனது வாழ்வில் காணப்படும். அதே போல, போர்கள், சண்டைகள், வழிப்பறி கொள்ளைகள், கொலைகள் என்று இவ்விதமான விவரங்களையே ஒரு மனிதன் அதிகமாக கேட்டு, அவைகளில் அதிகமாக போதிக்கப்பட்டால், 'வாய்ப்பு' கிடைக்கும் போது, அவனுக்குள் வாழும் இந்த குணங்கள் அப்படியே வெளிப்பட்டுவிடும்.*

*இதைத் தான் இந்த நிகழ்ச்சியில் நாம் காணப்போகிறோம்.*

*முஹம்மது மக்காவை தாக்க முடிவு செய்தார். ஆனால் இந்த விஷயம் யாருக்கும் தெரியக்கூடாது என்பதற்காக, தன் சகாக்களில் 8 நபர்களை தெரிவு செய்து, "இழம்" என்ற இடத்திற்கு அனுப்பினார். இதன் மூலமாக, முஹம்மது மக்காவை தாக்காமல், தன் கவனத்தை வேறு இடத்தை நோக்கி வைத்திருக்கிறார் என்று எல்லாரும் எண்ணவேண்டும் என்று நினைத்தார்.*

*முஹம்மதுவின் கட்டளையினால் இவர்களும் சென்றார்கள். சென்ற இடத்தில் ஒரு மேய்ப்பன் இவர்களை கடந்துச் சென்றான், அப்படி செல்லும் போது அவன் "இவர்களுக்கு சலாம் கூறினான்". இருந்தபோதிலும், இவனைக் கொன்று இவனது ஆடுகளை எடுத்துக்கொண்டார்கள். இதனை மதினாவிற்கு வந்து முஹம்மதுவிடம் சொன்ன போது, அல்லாஹ் ஒரு வசனத்தை (குர்-ஆன் 4:94) இறக்கினான்.*

***பீஜே தமிழாக்கம் குர்-ஆன் 4:94***

நம்பிக்கை கொண்டோரே! நீங்கள் அல்லாஹ்வின் பாதையில் (போருக்குச்) சென்றால் தெளிவுபடுத்திக் கொள்ளுங்கள்! உங்களுக்கு ஸலாம் கூறியவரிடம் இவ்வுலக வாழ்க்கையின் பொருட்களைப் பறிப்பதற்காக "நீ நம்பிக்கை கொண்டவன் இல்லை" என்று கூறி விடாதீர்கள்! அல்லாஹ் விடம் ஏராளமான செல்வங்கள் உள்ளன. இதற்கு முன் நீங்களும் இவ்வாறே இருந்தீர்கள். அல்லாஹ் உங்களுக்கு அருள் புரிந்தான். எனவே தெளிவுபடுத்திக் கொள்ளுங்கள்! நீங்கள் செய்வதை அல்லாஹ் நன்கறிந்தவனாக இருக்கிறான்.

***முஹம்மது ஜான் டிரஸ்ட் தமிழாக்கம் - 4:94***

முஃமின்களே! அல்லாஹ்வுடைய பாதையில் (போருக்கு) நீங்கள் சென்றால், (போர் முனையில் உங்களை எதிர்த்துச் சண்டை செய்வோர் முஃமின்களா அல்லது மற்றவர்களா என்பதைத்) தெளிவாக அறிந்து கொள்ளுங்கள். (அவர்களில்) எவரேனும் (தாம் முஃமின் என்பதை அறிவிக்கும் பொருட்டு) உங்களுக்கு "ஸலாம்" சொன்னால், இவ்வுலக வாழ்க்கையின் அற்பமான அழியக் கூடிய பொருட்களை அடையும் பொருட்டு "நீ முஃமினல்ல" என்று கூறி (அவரைக் கொன்று) விடாதீர்கள்; அல்லாஹ்விடம் ஏராளமான பொருட்கள் இருக்கின்றன; இதற்கு முன்னர் நீங்களும் (பயந்து பயந்து) இவ்வாறே இருந்தீர்கள் - அல்லாஹ் உங்கள் மீது அருள் புரிந்தான்; எனவே (மேலே கூறியாவாறு போர் முனையில்) நீங்கள் தெளிவு படுத்திக் கொள்ளுங்கள்; நிச்சயமாக அல்லாஹ் நீஙகள் செய்வதையெல்லாம் நன்கு அறிந்தவனாகவே இருக்கின்றான்.

இந்த வசனத்தின் மூலமாக, ஒரு முஸ்லிம் இன்னொருவருக்கு சலாம் சொன்னபோதும், உலக பொருட்களுக்காக, அவனை கொன்றது தவறு என்று அல்லாஹ் கூறுகின்றான். இப்னு கதீர் போன்ற குர்-ஆன் விரிவுரையாளர்களின் படி, "முஸ்லிம்கள் தவறுதலாகக் கூட இன்னொரு முஸ்லிமை கொல்லக்கூடாது" என்று கூறுகிறார்கள்.

தம்பி, மேற்கண்ட நிகழ்ச்சி, அந்த காலத்தில் முஹம்மதுவின் சஹாபாக்கள் எப்படி நடந்துக்கொண்டார்கள் என்பதைக் காட்டுகிறது. முஹம்மது எப்படியோ அப்படியே சஹாபாக்கள் நடந்துக்கொண்டார்கள் அல்லது அவர்களை உருவாக்கிய இஸ்லாமிய போதனை அவர்களை இப்படி பணத்திற்காக கொலை செய்ய தூண்டியுள்ளது.

***தம்பி, பொறுமையோடு கீழ்கண்ட கேள்விகளை படிப்பாயா? அவைகள் பற்றி சிந்திப்பாயா?***

***1) முஹம்மதுவின் தோழர்கள்*** வளர்க்கப்பட்ட விதத்தைப் பார்த்தாயா? செல்வத்திற்கு ஆசைப்பட்டு, "நான் ஒரு முஸ்லிம்" என்றுச் சொன்னாலும், அதை நம்பாமல் அவனை கொன்று, அவனது ஆடுகளை/ஒட்டகங்களை கொள்ளையடித்து மதினா வந்துள்ளார்கள்.

***2) முஸ்லிம்களாக பல ஆண்டுகள்*** முஹம்மதுவோடு வாழ்ந்தாலும், இப்படி கொல்வது தவறு என்று அவர்களின் மனசாட்சி அவர்களை எச்சரிக்கவில்லை என்பதை கவனிக்கவேண்டும்.

***3) ஒரு காட்டுமிராண்டி நடந்துக்கொள்வது*** போலவே இவர்கள் நடந்துக்கொண்டார்கள். பணம் கிடைத்தால் எதையும் செய்வார்களா இவர்கள்?

***4) இதனை அறிந்த பிறகு***, அல்லாஹ் வசனத்தை இறக்குகிறார் – முஸ்லிம்களா இல்லையா என்பதைப் பார்த்து கொலை செய்யுங்கள் என்று அறிவுரைக் கூறுகிறார். புனிதப்போர் என்ற வேஷம் போட்டு செல்லும் போது, , முஸ்லிம்கள் அல்லாதவர்களை எந்த காரணமும் இல்லாமல் கொலை செய்யலாம் என்பது தானே, இதன் கருத்து.

***5) இந்த கொலையை செய்தவர்களுக்கு*** அல்லாஹ் என்ன தண்டனை கொடுத்தார் என்று, உன்னால் கண்டுபிடித்து எனக்கு அறிவிக்கமுடியுமா தம்பி?

***6) இந்த சஹாபாக்கள் அழிந்துப்போகும்*** செல்வத்தின் மீது ஆசை வைத்து இப்படி கொலை செய்துள்ளார்கள் என்று அல்லாஹ் வெளிப்படையாக இவர்களை குற்றப்படுத்துகிறார். இவர்களுக்கு என்ன தண்டனை உங்கள் இறைத்தூதர் கொடுத்தார்?

***7) தாயைப்போல பிள்ளை, நூலைப்போல சேலை*** என்றுச் சொல்வார்கள், அதுபோல முஹம்மதுவின் சீடர்கள் அவரைப் போலவே வாழ்ந்து இருக்கிறார்கள்.

தம்பி, கடந்த 10 நாட்களாக, 11 இஸ்லாமிய வழிப்பறி கொள்ளைகளை நாம் ஆய்வு செய்துள்ளோம். இன்னும் அனேக போர்கள், கொலைகள், தனிமனித வெறுப்புக்கள், என்று அனேக இஸ்லாமிய வன்முறைப் பட்டியல் நீண்டுக்கொண்டே போகிறது.

தம்பி, ஒரு மனிதனாக உன்னை நினைத்துப் பார்த்து சிந்தித்துப்பார். இப்படியெல்லாம் கொலை வெறியோடு பரவிய மார்க்கத்தைத் தான் நீ இப்போது பின்பற்றிக்கொண்டு இருக்கிறாய். இஸ்லாமிய நூல்களை அதிகமாக படி, ஆய்வு செய், சத்தியத்தை அறிய முயற்சி செய். யார் உன்னை கைவிட்டாலும், சத்தியம் ஒரு நாள் உன்னை விடுதலையாக்கும். இந்த நம்பிக்கையில் தான் நான் உன்னோடு உரையாடிக்கொண்டு இருக்கிறேன்.

இதோ இன்று ரமளான் மாதத்தின் கடைசி நாள், நாளைக்கு நீ ரமளான் கொண்டாடப்போகிறாய். இந்த புனித மாதத்தில் உலக அளவில் நடந்த இஸ்லாமிய தாக்குதல்கள், தீவிரவாத செய்ல்கள், எத்தனை என்று உனக்குத் தெரியுமா? இதனால் எத்தனைப் பேர்கள் மரித்தார்கள், ஊனமுற்றவர்களாக மாறினார்கள் என்று உனக்குத் தெரியுமா? இதோ அந்த பட்டியல்:

***Ramadan Bombathon***

***2013 Scorecard***

***Because, if you think all religions are the same,***

***then you haven't been paying attention***

| 2013 | ***In the name of The Religion of Peace*** | ***In the name of ANY Other Religion*** | ***By 'Islamo-Phobes'*** |
|---|---|---|---|
| ***Terror Attacks*** | *310* | *0* | *1** |
| ***Suicide Bombings*** | *28* | *0* | *0* |
| ***Dead Bodies*** | *1651* | *0* | *0* |
| ***Wounded*** | *3048* | *0* | *0* |

மூலம்: **[http://www.thereligionofpeace.com/](http://www.thereligionofpeace.com/)**

இப்படிக்கு,

உன் அண்ணன், தமிழ் கிறிஸ்தவன்.

**மூலம்**

**உமரின் ரமளான் மாத கட்டுரைகள்**